இஹ்யாவு உ..லூமித்தீன்

# நாயகத்தின் நற்பண்புகள்

மூலம்:
இமாம் கஸ்ஸாலி (ரஹ்)

தமிழாக்கம்:
மௌலவி எஸ். அப்துல் வஹ்ஹாப் பாகவி

வெளியீடு:

யுனிவர்ஸல் பப்ளிஷர்ஸ்

6/1, 2வது தெரு, டாக்டர் சுப்பராயன நகர்,
கோடம்பாக்கம், சென்னை - 600024
போன் : 4836907

# முன்னுரை

அனைத்தையும் படைத்து அவற்றிற்கு அழகையும் கொடுத்த ஏகனே! திருத்தூதர் முஹம்மது (ஸல்) அவர்களைக் குணசீலராக்கிய வல்லவனே! உன்னை நான் பாராட்டுகிறேன். நீ பாராட்டுக்குரியவன். புகழனைத்தும் உனக்கே உரித்தாகட்டும். முதலில் நீ திருத்தூதருக்கு நற்பண்புகளையும் உயர் குணங்களையும் அளித்தாய். பின்னர் அந்தப் பெருந்தகையை உன் அன்பிற்குரிய நண்பராக்கிக் கொண்டாய். நீ ஒரு மனிதனைப் பண்படுத்த விரும்பினால் அவன் மனத்தில் திருத்தூதரைப் பற்றிய நல்லெண்ணத்தை உருவாக்குகிறாய். இதனால் அந்த மனிதன் திருத்தூதரைப் பின்பற்றிச் செயலாற்றுகிறான். அதற்குரிய வசதியையும் மனப்பக்குவத்தையும் அவனுக்கு நீ ஏற்படுத்துகிறாய். வேறு சிலரது விஷயத்தில் இதற்கு மாற்றமாக நடந்து கொள்கிறாய். அவர்களது உள்ளத்தில் திருத்தூதரைப் பற்றிய ஆட்சேபத்தை உருவாக்குகிறாய். இதனால் அவர்கள் திருத்தூதரை மறந்து, அவர்கள் நடந்த நல்வழியை இழந்து குறுக்குப் பாதையில் நடை போடுகிறார்கள்.

மனிதனின் செயல்கள் அவனுடைய மனநிலையை எடுத்துரைக்கும் ஆற்றல் கொண்டவை. ஒரு மனிதனின் மனப்பண்பு எந்த நிலையில் இருக்கிறது என்பதை அவனுடைய செயலைப் பார்த்து எளிதில் தீர்மானித்து விடமுடியும். மனத்தில் தோன்றும் எண்ணந்தான் செயலாக உருப்பெறுகிறது. ஆக குணத்தின் பிரதிபலிப்பே செயல். குணசீலர்களிடமிருந்து துர்ச்செயலை எதிர்பார்க்க முடியாது. ஒரு மனிதனின் உள்ளம் எந்த அளவுக்குத் தூய்மை பெறுகிறதோ அந்த அளவுக்குத்தான் அவனிடமிருந்து தூய்மையான செயல்கள் வெளிப்படுகின்றன. உள்ளம் ஒளிமயமாகும்போது அதன் கிரணங்கள் அவயவங்களில் பிரதிபலிக்கின்றன; அவயவங்கள் சிறப்பான செயல்களை உருவாக்குகின்றன. ஒரு மனிதனின் உள்ளத்தில் இறையொளி புகுந்து

விட்டால் அவனிடமிருந்து தீய செயலை எதிர்பார்க்க முடியாது. இந்தக் கட்டத்தில் அவன் தீய செயல்களுக்கு பதிலாக நற்செயல்களை வெளிக்கொணர்கிறான். மனத்தில் இல்லாத ஒன்று செயலில் வெளிப்பட முடியாது. ஒரு மனிதனின் உள்ளத்தில் இறையச்சம் இல்லை என்றால் அவனுடைய செயலில் அதை எதிர்பார்ப்பது அறியாமை.

இஹ்யாவு உலுமித்தீனின் இரண்டாம் பாகம் இந்த நூலுடன் முடிவுறுகிறது. இந்த இரண்டாம் பாகத்தில் இடம் பெற்றுள்ள ஒன்பது நூல்களில் உலகியல் விவகாரம் சம்பந்தமான அநேக விவரங்கள் இறைந்து கிடக்கின்றன. அவற்றையெல்லாம் ஒன்றுசேர்த்து எழுதுவது சிரமமான காரியம். தவிர, இந்த இரண்டாம் பாகத்திற்கு முன்னர் இஹ்யாவின் முதல்பாகம் எழுதப்பட்டு விட்டது. இதில் பத்து நூல்கள் இடம்பெற்றிருக்கின்றன. அவை அனைத்தையும் மேலெழுந்த வாரியாகப் பார்வையிட்டேன். அவற்றில் ஒழுக்க முறை சம்பந்தமான விவரங்கள் கணிசமான அளவுக்கு இடம் பெற்றிருக்கின்றன. ஆனால் அவற்றை எல்லாம் மீண்டும் இங்கே விவரிப்பது சிரமம். எழுதியவற்றையே திருப்பி எழுதுவது எனக்கும் சிரமம்; படித்தவற்றையே திருப்பிப் படிப்பது உங்களுக்கும் சிரமம்.

எனவே இந்த நூலில் திருத்தூதரின் தன்மைகள், நற்பண்புகள், ஒழுக்க முறைகள் முதலியவற்றை விவரிக்க எண்ணுகிறேன். இயன்றவரை ஆதாரபூர்வமான திருப்பண்புகள் அனைத்தையும் வரிசைக் கிரமமாகத் தெளிவுப்படுத்தப் போகிறேன். திருத்தூதரின் நடை உடை, பாவனைகள், அங்க அமைப்புக்கள் முதலியவற்றையும் உரிய இடத்தில் விவரிப்பேன். தவிர, திருத்தூதரால் நிகழ்த்தப்பட்ட அற்புதங்கள் சிலவற்றையும் இந்த நூல் ஏற்றுக் கொண்டிருக்கிறது.

இறைவனே நேர்மைக்கு வழிவகுப்பவன். திருத்தூதரைப் பின்பற்றி நடக்கும் மனப்பான்மையை அவன்தான் நமக்கு தந்தருள வேண்டும். கலங்கித் தவிப்பவர்களுக்கு அவனே

ஆதாரம். தடுமாறிப் போய்ப் பிரார்த்திப்பவர்களின் பிரார்த்த னையை அவனே நிறைவேற்றுகிறான்.

எல்லாம் வல்ல நாயன் திருக்குர்ஆனின் உதவியால் திருத்தூதரை எப்படி ஒழுக்கச்சீலராக்கினான் என்பதை முத லில் ஆராய்வோம். அடுத்து, திருத்தூதரின் குணாதிசயங்கள், ஒழுக்கங்கள், உரையாடல், பேச்சு, சிரிப்பு முதலியவற்றைப் பார்ப்போம். இதன் பிறகு அவர்கள் உணவருந்திய முறை, உடையணிந்த வகை முதலியவை நம் சிந்தனைக்குரியவை. திருத்தூதர் அவர்கள் மன்னிக்கும் மனப்பான்மை பெற்றிருந் தார்கள். எதிரியைத் தண்டிப்பதற்கு வேண்டிய சக்தி தம்மிடம் இருந்தும் அவர்கள் மன்னித்திருக்கிறார்கள். இந்த உயர் பண்பை உரிய இடத்தில் ஆராய்வோம். தாம் விரும்பாத ஒன்று நடைபெறும் போது திருத்தூதர் அவர்கள் சகிப்புத் தன்மை யோடு செயலாற்றினார்கள். இந்த சகிப்புத்தன்மையும் நம் ஆராய்ச்சிக்குக் குரியதுதான். உரிய இடத்தில் இந்த ஆராய்ச்சி இடம் பெறும். திருத்தூதரின் தயாள மனப்பான்மை, வீரப் பிரதாபம், அடக்கநுணம் இவற்றை முறையே ஆராய்வோம். திருத்தூதரின் அங்க அமைப்புகளையும் அவர்கள் நிகழ்த்திய அற்புத சம்பவங்களையும் நாம் கடைசியாக ஆராயவேண்டும்.

★★★

# என்னுரை

'அக்லாகுந்நபி' என்ற நூலின் விரிவான தமிழாக்கம் 'நாயகத்தின் நற்பண்புகள்' என்ற பெயர் தாங்கியிருக்கிறது.

இந்நூலில் இமாம் கஸ்ஸாலி (ரஹ்) அவர்கள் பெருமானாரைப் பற்றிய விவரங்கள் அனைத்தையும் கொடுக்கிறார்கள். சமுதாயத்திற்கு இது பெரிதும் பயன்படும் என்று நம்புகிறேன்.

இதை வெளியிடும் பதிப்பகத்தாருக்கு என் ஆழ்ந்த நன்றி!

தங்களன்பன்
எஸ். அப்துல் வஹ்ஹாப்

நாகூர்,
8.9.59

# பொருளடக்கம்

# நாயகத்தின் நற்பண்புகள்

## 1. திருமறை கற்பித்தது

மன உருக்கத்தோடு பிரார்த்திக்கும் மனப்பான்மை திருத்தூதரிடம் நிரம்பிக் கிடந்தது. தமக்கு நற்பண்புகளையும் நற்செயல்களையும் கொடுத்தருளுமாறு அவர்கள் இறைவனிடம் பிரார்த்திப்பார்கள். ''இறைவனே! என் குணத்தையும் செயலையும் சிறந்து விளங்கச் செய்வாயாக!'' என்று அடிக்கடி பிரார்த்திப்பார்கள். ''நாயனே! தீய செயலை விட்டும் என்னை அகற்றுவாயாக!'' என்று முறையிடுவார்கள்.

திருத்தூதரின் இந்தப் பிரார்த்தனையை இறைவன் நிறைவேற்றி விட்டான். அவன், வேண்டுகோளுக்குப் பதிலிறுப்பவன். பிரார்த்தனையை அங்கீகரிப்பவன். ''நீங்கள் என்னிடம் கேளுங்கள்; நான் உங்களுக்குத் தருகிறேன்'' என்று அவன் கூறுகிறான். எனவே திருத்தூதரின் பிரார்த்தனையை அங்கீகரித்துத் திருக்குர்ஆனை அவர்களுக்கு அளித்தான். திருக்குர்ஆனின் மூலம் இறைவன் திருத்தூதரைப் பண்படுத்தினான். குணசீலராக்கினான். ஆகவேதான், ''திருத்தூதரின் நற்பண்புகள் யாவை?'' என்று யாரேனும் கேட்டால், ''திருக்குர்ஆனில் உள்ளவை அனைத்தும்!'' என்று நம்மால் பதில் சொல்ல முடிகிறது.

சஅது பின் ஹிஷாம் என்பவர் அன்னை ஆயிஷாவிடம் வினவினார். ''திருத்தூதரின் நற்பண்புகளை பற்றிக் கொஞ்சம் சொல்கிறீர்களா? அவர்களிடம் என்னவென்ன குணங்கள் இருந்தன என்பதை விளக்க முடியுமா?''

அன்னை ஆயிஷா, ''நீங்கள் குர்ஆன் ஓதுவது இல்லையா?'' என்று கேட்டார்.

''ஆம், ஓதுகிறேன்!''

ஆயிஷாவின் விடை தெளிவாக வெளிப்பட்டது; ''குர் ஆன் போதித்த நற்பண்புகள் அனைத்தும் திருத்தூதரிடம் இருந்தன.''

திருக்குர்ஆன் போதிக்கிறது: ''மன்னிக்கும் மனப்பான் மையைப் பற்றிக்கொள்ளும்; நற்காரியம் புரியுமாறு மக்களைத் தூண்டும்; முட்டாள்களைப் பொருட்படுத்தாதீர்!''

மீண்டும் கூறுகிறது: ''நீதி நேர்மையோடு நடக்குமாறும், பந்துக்களை ஆதரிக்குமாறும் இறைவன் கட்டளையிடுகிறான். அநீதியையும் அட்டகாசத்தையும் தீயவற்றையும் அவன் தடுக் கிறான்.

பிறிதோரிடத்தில் திருமறை பேசுகிறது: உமக்கு ஏற்பட்ட துன்பங்களைச் சகித்துக்கொண்டு பொறுமையோடு செயலாற் றும்!''

மற்றோரிடத்தில் அது தீர்ப்பளிக்கிறது; ''பொறுமையாளர் களுக்கு இறைவனிடம் மன்னிப்பு உண்டு... ''

இன்னுமோர் இடத்தில் திருமறை இப்படி உபதேசம் செய்கிறது, ''அவர்களை நீர் மன்னித்து விடும்! இறைவன் நல்லவர்களை விரும்புகிறான்.''

மீண்டும்: ''அவர்கள் மன்னித்து விடட்டும். இறைவன் உங்களை மன்னிப்பதை நீங்கள் விரும்ப மாட்டீர்களா?''

மற்றோர் அறிவுரை: '' அவர்கள் சினத்தை அடக்கியாள்ப வர்கள்; மக்களை மன்னிப்பவர்கள், நல்லவர்களை இறைவன் விரும்புகிறான்.''

''மனத்தில் தோன்றும் எண்ணங்களில் சிலவற்றை ஒதுக் கித் தள்ளுங்கள்! ஏனெனில் எண்ணங்களில் சில தவறானவை. துப்பறியாதவர்கள்! மற்றவர்களைப்பற்றிப் புறம் பேசாதீர்கள்!''

உஹத் யுத்தத்தின்போது நடந்த சம்பவம் ஒன்றை இங்கு நாம் நினைவு கூர வேண்டும். எதிரிகளால் திருத்தூதரின் பல் ஒன்று விழுந்து விட்டது; போர்முனையில் நிகழும் சம்பவங்களில் இதுவும் ஒன்று. திருத்தூதரின் முகம் எங்கும் உதிரம், அவர்கள் உதிரத்தை வழித்து விட்டுக் கொண்டிருந்தார்கள். ''தங்களிடம் அனுப்பப்பட்ட தூதரின் முகத்தை இப்படி உதிரத்தால் கோரப்படுத்தும் இவர்கள் எவ்வாறு வெற்றியடையப் போகிறார்கள்!'' என்று வருத்தத்தோடு கூறினார்கள்.

இறைவனிடமிருந்து இப்படிச் செய்தி வந்தது: ''உபதேசம் செய்வதைத் தவிர்த்து அவர்கள் விஷயத்தில் உமக்கு வேறு எந்தப் பொறுப்பும் கிடையாது!'' - இந்தத் திருவசனத்தின் மூலம் திருத்தூதருக்கு இறைவன் அறிவுறுத்துகிறான்; பொறுமையோடு செயலாற்ற வேண்டும் என்று எடுத்துரைக்கின்றான்; இப்படியெல்லாம் உணர்ச்சி வசப்பட்டு சிந்திக்கக் கூடாது என்று சுட்டிக் காட்டுகிறான்.

இதுபோன்ற அறிவுரைகள் திருக்குர்ஆனில் ஏராளம், அவற்றையெல்லாம் ஒன்று சேர விவரித்து முடிப்பது சாத்தியமில்லை.

திருமறையின் உதவியால் திருத்தூதர் அவர்கள் பண்படுத்தப்பட்டார்கள். திருத்தூதர் சிறந்த பண்புகளுக்கு எடுத்துக்காட்டாக இருக்க வேண்டும் என்பதுதான் இறைவனின் குறிக்கோள். திருத்தூதர் அவர்கள் பண்பு நிறைந்த தங்கமானார்கள். பின்னர் அந்தத் தங்கம் அகில உலகத்திற்கும் பொன்னொளியை அளித்தது; திருத்தூதரவர்கள் குர்ஆனால் பண்பட்டார்கள். பின்னர் அவர்கள் குர்ஆனின் உதவியால் மக்கள் அனைவரையும் பண்படுத்தினார்கள்.

இதனால்தான் ''நற்பண்புகளைப் பாரில் பரப்பவே நான் அனுப்பப்பட்டிருக்கிறேன்'' என்று திருத்தூதர் அவர்கள் கூறினார்கள். இதன் பிறகு அவர்கள் மக்களை தூண்டினார்கள்; நற்பண்புகளிலும் நற்காரியங்களிலும் அவர்களுக்கு ஆர்வத்தை

உண்டாக்கினார்கள். இதைப் பற்றி 'ரியாலதுன்னப்ஸ்'* என்ற நூலில் விளக்கம் தந்திருக்கிறேன். அவற்றை மீண்டும் இங்கு விவரிப்பதை நான் விரும்பவில்லை.

திருத்தூதரைப் பண்படுத்திய இறைவன் பின்னர் பாராட்டு கிறான். ''நீர் சிறந்த குணசீலர்'' என்று போற்றுகிறான். இறைவனை நான் பாராட்டுகிறேன். அவனது வலிமை என்ன! அவனது உதவிதான் என்ன? அவனது பேராற்றலை எண்ணி அதிசயப்படுகிறேன். அவனது அன்பு விரிவானது. அவனே குணத்தைக் கொடுத்தான். அவனே பண்பை கற்பித்தான். பின்னர் அவனே பாராட்டுகிறான். திருத்தூதருக்கு இறைவன் தான் எல்லாப் பண்புகளையும் கற்றுக் கொடுத்தான். அவன் தான் சீர்குணங்கள் யாவை என்பதை விளக்கிக் காட்டினான். அவன்தான் ''நீர் சிறந்த குணசீலர்'' என்று பாராட்டுகிறான். இதன் பிறகு திருத்தூதருக்கு ஒரு பொறுப்பு ஏற்பட்டது. தம்மிடம் உள்ள பண்புகளை மற்றவர்களுக்குப் போதிக்க வேண்டிய மகத்தான பொறுப்பு. எனவே அவர்கள் மக்களுக்கு போதித்தார்கள். ''சீர் குணத்தை இறைவன் விரும்புகிறான்; துர்குணத்தை அவன் வெறுக்கிறான்'' என்று விளக்கினார்கள்.

அறிஞர் அலீ கூறினார்கள்: ''இறைவனின் நற்கூலியை எதிர்பார்க்காமல், நரகத் தண்டனைக்கு அஞ்சாமல் செயலாற்று பவர்கள் நற்பண்புகளைக் கைக்கொள்ள வேண்டும். இதுதான் வெற்றிக்குரிய வழி.''

ஒரு நண்பர் குறுக்கிட்டு வினவினார்: ''நற்பண்புகளை எடுத்து நடப்பதுதான் வெற்றிக்குரிய வழி என்கிறீர்களே, இதைத் திருத்தூதரின் வாய்மொழியாகக் கேட்டிருக்கிறீர் களா?'' அவர்கள் இவ்வாறு கூறியிருக்கிறார்களா?''

''ஆம்'' நான் கேட்டிருக்கிறேன், பெருமானார் அவர்கள் தெளிவாகக் கூறியிருக்கிறார்கள்.'' - இவ்வாறு விடையிறுத்த அந்த அறிஞர் ஒரு சம்பவத்தை விளக்கினார்.

---

* இந்த நூலின் தமிழாக்கம் 'உளத் தூய்மை' என்ற பெயருடன் முன்னரே வெளிவந்து விட்டது.

ஒரு சமயம் திருத்தூதருக்கு முன்னால் கொண்டுவரப் பட்ட கைதிகளில் பெண்மணி ஒருவர் இருந்தார். ''என்னை விட்டு விடுங்கள்! அரபு மக்கள் என்னைப் பார்த்துச் சிரிக்கு மாறு செய்து விடாதீர்கள்!'' என்று முறையிட்டார்.

பெருமானார் அவர்கள் அந்த மங்கை சொல்வதைக் கூர்ந்து கவனித்தார்கள்.

''எனது தந்தை மிகவும் நல்லவர். பெருந்தன்மையுள்ள வர். அவர் குடும்பத்தை பொறுப்போடு கவனித்து வந்தார்! கைதிகளுக்கு உரிமையளித்தார்; பசித்தவர்களுக்கு உணவளித் தார்; உதவி தேடி வந்தவர்களை அவர் விரட்டியதேயில்லை; அவர் பெயரையும் சொல்லி விடுகிறேன்; ஹாதீம்தாயி - நான் அவர் புதல்வி. அவருடைய சீர் குணங்களுக்காகவேனும் என்னை விட்டு விடுங்கள்.''

''இவை அனைத்தும் உண்மை முஸ்லிமுக்கு இருக்க வேண்டிய பண்புகள்'' என்று அண்ணலவர்கள் கூறினார்கள். ''உன் தந்தை இஸ்லாமிய அடிப்படையில் வாழ்ந்து வந்ததால் அவருக்காக நாங்கள் உன்மீது அனுதாபம் காட்டுகிறோம். அவர்மீது அன்பு செலுத்துகிறோம்... நண்பர்களே! இந்த மங்கையை விட்டுவிடுங்கள்! இவள் தந்தை பண்புள்ளவர், பண்பை விரும்புபவர். பண்பையும் பண்புள்ளவர்களையும் நாம் மதிக்கத்தான் வேண்டும். இறைவன் நற்பண்புகளை விரும்புகிறான்.''

அபு புர்தா எழுந்து நின்றார். அவர் திருத்தூதரின் நண்பர்க ளில் ஒருவர். திருத்தூதரின் விளக்கத்தில் அவர்களுக்குச் சிறிது சந்தேகம் வந்துவிட்டது.

''திருத்தூதர் அவர்களே! நற்பண்பை இறைவன் விரும்புவ தாகச் சொல்கிறீர்களே, அது உண்மைதானா?'' - பண்பை மதிக்காத அரேபியக் குடிகளிடமிருந்து இவ்வாறு கேள்வி எழுவது அதிசயமல்ல. அவர்களுக்கு எந்தப் பண்பும் தெரி யாது. பண்புகளில் அவர்களுக்கு நம்பிக்கையுமில்லை. அவர்க

ளுக்குப் பண்பின் பெருமையை எடுத்துரைக்க வேண்டிய மகத்தான பொறுப்பு திருத்தூதர் அவர்களுக்கு இருந்தது.

''ஆம். அதிலென்ன சந்தேகம் உமக்கு?'' என்று திருத்தூதர் அவர்கள் அழுத்திக் கூறினார்கள். ''உறுதியாகக் கூறுகிறேன். என் உயிர் யார் வசத்திலிருக்கிறதோ. அவன் மீது ஆணையிட்டுக் கூறுகிறேன். நற்பண்புள்ளவர்களைத் தவிர்த்து மற்றவர்களால் சுவனத்தில் பிரவேசிக்க முடியாது.''

அண்ணலவர்கள் கூறினார்கள்: ''சீர்குணங்களுக்கும் நற்பண்புகளுக்கும் மத்தியில் இஸ்லாம் இடம் பெற்றிருக்கிறது. இஸ்லாத்தை அவை முற்றுகையிட்டு நிற்கின்றன. ''நற்குணங்கள் நற்செயல்கள் பலதரப்படுகின்றன. நல்ல முறையில் பழகுவது இனிமையாக உரையாடுவது, ஆடம்பரமற்ற வகையில் வாழ்க்கையை நடத்துவது, உணவையும், செல்வத்தையும் தர்மம் செய்வது, எதிர்ப்படும் முஸ்லிம்களுக்கு 'சலாம்' சொல்வது - இவை அனைத்தும் நற்பண்புகளே. முஸ்லிம் ஒருவன் வியாதியால் பீடிக்கப்பட்டால், அவன் நல்லவனாயினும், கெட்டவனாயினும் அவனைப் பார்த்து வர வேண்டும். முஸ்லிம் ஒருவனின் பிரேதம் சுமந்து செல்லப்படும் போது பின்பற்றிச் செல்ல வேண்டும். இவை இரண்டும் மகத்தான பண்புகள். பக்கத்து வீட்டுக்காரருடன் நேசப்பான்மையோடு நடந்துகொள்ள வேண்டும். அவர் முஸ்லிமா இல்லையா என்று ஆராயத் தேவையில்லை. விருந்தழைப்புக்கு மதிப்பளிக்க வேண்டும். மக்களிடம் நட்புணர்வோடு பழக வேண்டும். தயாளம் சகிப்புத் தன்மை முதலியவற்றையும் நீங்கள் எடுத்து நடக்க வேண்டும். இருவர் சந்தித்தால் உரையாடலுக்கு முன்னால் 'சலாம்' சொல்ல வேண்டும். மற்றவர்கள் தவறு செய்தால் அதை நீங்கள் மன்னித்து விடுங்கள். உங்களுக்கு சினம் ஏற்பட்டால் அடக்கிக் கொள்ளுங்கள்! மார்க்கத்தின் சட்டங்களுக்கு மதிப்புக் கொடுங்கள்! இஸ்லாம் அங்கீகரிக்காததை செய்யாதீர்கள்! வீண் வேலை, தவறான பேச்சு முதலியவற்றை நீங்கள் தவிர்க்க வேண்டும். பெருமை, பொறாமை, சூழ்ச்சி, அநீதி இவை அனைத்தையும் ஒதுக்கத் தள்ளுங்கள்! இவற்றை இஸ்லாம் வன்மையாகக் கண்டிக்கிறது.

அனஸ் கூறுகிறார்: ''அண்ணலவர்கள் எந்த ஒரு நற்செயலையும் விடவில்லை. ஒவ்வொன்றாகச் சுட்டிக் காட்டினார்கள்; கைக்கொண்டு நடக்குமாறு போதித்தார்கள். இழி செயல்களையும் அவர்கள் சுட்டிக் காட்டினார்கள். அப்போதெல்லாம் அவற்றைத் தவிர்த்தொழுகுமாறு போதித்தார்கள். 'இறைவன் நீதியையும் நேர்மையையும் விரும்புகிறான்' என்ற இறைக் கருத்து ஒன்றே நமக்குப் போதுமானது.''

ஒரு சமயம் அண்ணலவர்கள் தமது நண்பருக்கு உபதேசம் செய்தார்கள். ''மஆத்! உம் உள்ளத்தில் இறையச்சம் ஒளிவிட வேண்டும். உண்மையைத் தவிர்த்து வேறு எதையும் நீர் பேசக்கூடாது! வாக்குறுதியை கொடுத்துவிட்டால் அதை அவசியம் நிறைவேற்றிவிடும். உம்மிடம் ஒப்படைக்கப்பட்ட பொருள்களுக்கு - அமானித சாமான்களுக்கு - மோசம் செய்யாதீர்! பக்கத்து வீட்டுக்காரருடன் நீர் உண்மையோடு நடந்து கொள்ள வேண்டும். அநாதைகள் மீது நீர் அன்பு கொள்ள வேண்டும். மஆத்! நீர் இனிமையாக உரையாடும்! எதிர்ப்படும் முஸ்லிம்களுக்கு சலாம் சொல்லும்! நற்செயல்களையே செய்து வாரும்! உமது ஆசைகளுக்கு வரம்பு கட்டிக் கொள்ளும்! மத நம்பிக்கையை வலுவேற்றிக் கொள்ளும்! திருக்குர்ஆனை நீர் நல்ல முறையில் விளங்கிக் கொள்ள வேண்டும். மறுமையை நீர் விரும்ப வேண்டும். உமக்கு விசாரணை உண்டு என்பதை மறந்து விடாதீர். அடக்கத்தோடு செயலாற்றும்! மஆத்! உம்மை நான் எச்சரிக்கிறேன். அறிஞனை நிந்திக்காதீர்; உண்மையுள்ளவனைப் பொய்யனாக்காதீர்; அயோக்கியனைப் பின்பற்றாதீர்; நேர்மையுள்ள தலைவனுக்குத் துரோகம் செய்யாதீர்; உலகத்தில் கலகத்துக்கும் புரட்சிக்கும் வித்திடாதீர்... ''

இப்படித்தான் அண்ணலவர்கள் அரபு மக்களைத் திருத்தினார்கள். இவ்வாறுதான் அரேபிய மக்களின் உள்ளத்தில் நற்பண்புகள் இடம் பெற்றன.

# 2. திருத்தூதரைப் பற்றி

திருத்தூதர் அவர்களைப் பற்றிய சீர்குணங்கள் ஏராளம். அவை திருமறையிலும் திருத்தூதர் மணிமொழி நூல்களிலும் சிந்திக் கிடக்கின்றன. அவற்றை எல்லாம் இயன்றவரை ஒன்று திரட்டிச் சில அறிஞர்கள் தமது நூல்களில் எழுதியிருக்கிறார்கள். அந்த அறிஞர்கள் குறிப்பிட்ட கருத்துக்களை இந்த அத்தியாயத்தில் விவரிக்க விரும்புகிறேன்.

அண்ணலவர்கள் மக்களின் மத்தியில் சகிப்புத் தன்மையோடும் வீர உணர்வோடும் வாழ்ந்து வந்தார்கள். நீதியும் நேர்மையும் அவர்களிடம் ஒட்டி வளர்ந்திருந்தன. களங்கமில்லாத வாழ்க்கைக்கு அவர்கள் ஒரு பிரதிபிம்பம். தமக்கு உரிமையில்லாத எந்த மங்கையின் கரத்தையும் அவர்கள் தொட்டதில்லை. தயாள சிந்தை அவர்களிடம் வேரூன்றிப் படர்ந்திருந்தது. இரவு நேரத்தில் படுக்கைக்குச் செல்லும் போது அவர்களிடம் ஒரு தங்கக் காசு, ஒரு வெள்ளி நாணயம் கூட இருக்காது. அவ்வளவு தூரம் அவர்கள் தர்மம் செய்தார்கள். தம்மிடம் உள்ள அனைத்தையும் இறை வழியில் செலவிட்டு விடுவார்கள். அப்படி ஏதேனும் மிஞ்சியிருந்தால், பணத் தேவையுள்ள ஒரு மனிதனைத் தேடிப் பிடித்து அவனுக்கு உதவி செய்வார்கள். —இதன் பிறகுதான் அவர்கள் படுக்கப் போவார்கள்.

தேவைக்கதிகமாக அவர்கள் பணத்தை உபயோகிக்க மாட்டார்கள். சாதாரண உணவு வகைகளுக்குப் போதிய பணத்தை மட்டும் ஒதுக்கிக் கொண்டு மற்ற அனைத்தையும் ஏழைகளுக்கு அளித்து விடுவார்கள். கோதுமை ரொட்டியும் பேரீச்சங் கனியும்தான் அவர்களின் உணவு. சாதாரணமாக அவர்கள் இப்படித் தான் வாழ்ந்தார்கள். யாரிடமும் அவர்கள் யாசகம் கேட்டது

கிடையாது. அன்பு மிகுதியால் வரும் அன்புக் காணிக்கைகளை அன்போடு ஏற்றுக் கொள்வார்கள். தமக்கு அன்பளிப்பு அளிக்குமாறு யாரையும் கேட்க மாட்டார்கள்.

உணவுக்காக அவர்கள் அதிக நேரத்தை வீணாக்குவதில்லை. சில சமயங்களில் மற்றவர்கள் சாப்பிட்டு முடிப்பதற்கு முன்னால் அவர்கள் சாப்பிட்டு முடித்து விடுவார்கள்.

செருப்பைக் கழற்றி வைத்துவிட்டு, வரிந்து கட்டிக் கொண்டு அவர்கள் மனைவியருக்கு ஒத்தாசை புரிவதும் உண்டு. சில சமயங்களில் இறைச்சியைத் துண்டுபோட்டுக் கொடுப்பார்கள்.

திருத்தூதர் அவர்களுக்கு இயற்கையிலேயே வெட்க உணர்வு அதிகமாக இருந்தது. அவர்கள் யாரையும் நேரப்பட ஊடுருவிப் பார்த்தது கிடையாது. ஏழை, பணக்காரன் என்ற பாகுபாடு இல்லாமல் எல்லோருடைய விருந்தையும் ஏற்றுக் கொள்வார்கள். அன்பளிப்பை நிராகரிக்க மாட்டார்கள். சிறிதளவு அமுதமானாலும், முயலின் தொடைக்கறியானாலும் ஏற்றுக் கொண்டு விடுவார்கள். ஆனால் ஒரு நிபந்தனை, அது அன்பளிப்பாக இருக்க வேண்டும். தர்மமாகக் கொடுக்கப்படும் எதையும் அவர்கள் பெற்றுக் கொள்ள மாட்டார்கள். ஏழை எளியோரைப் பெரிதும் விரும்பினார்கள். அவர்களின் அழைப்புக்குச் செவிமடுத்தார்கள்.

திருத்தூதர் அவர்களுக்குக் கோபம் வந்ததுண்டு. ஆனால் சுயநலத்துக்காக அவர்கள் சினமுற்றது கிடையாது. இறைவனுக்காகவே சினமுற்றார்கள்; இறைவனின் கட்டளை புறக்கணிக்கப்படுகிறதே என்று பொங்கி எழுந்தார்கள்; உண்மையைத் துணிந்து கூறினார்கள்; நேரிய வழியில் துணிச்சலோடு நடைபோட்டார்கள். இஸ்லாத்திற்கு எதிரானவர்களிடமிருந்து வரும் உதவியை அவர்கள் அங்கீகரிப்பதில்லை. ''இணை வைப்பவர்களின் உதவி எமக்குத் தேவையில்லை'' என்று கூறி வந்தார்கள்.

ஒரு சந்தர்ப்பத்தில் முக்கியமான நபித் தோழர்களில் ஒருவர் யூதர்களிடம் சிக்கிக் கொண்டார். அவரை அவர்கள் கொன்று விட்டார்கள். ஆனால் இதைச் செவியுற்ற திருத்தூதர் அவர்கள் கலங்கவில்லை. நேர்மை தவறாமல் செயலாற்றினார் கள். அந்த நண்பரின் பிரேதத்தை மீட்பதற்காக நூறு ஒட்டகங் களை அனுப்பினார்கள். இங்கு கவனிக்க வேண்டிய விஷயம் ஒன்று உண்டு. திருத்தூதர் அவர்கள் நூறு ஒட்டகங்களை அனுப்பிய அதே நேரத்தில் நபித் தோழர்களுக்கு ஒரே ஒரு ஒட்டகம் தேவைப்பட்டது - தம் பசியைத் தணித்து பலம் பெறுவதற்காக!

சில வேளைகளில் அண்ணலவர்கள் பசியின் கொடுமை யால் வயிற்றில் கல்லைக் கட்டிக் கொண்டிருந்தார்கள். சுவை யான உண்டிக்காக அவர்கள் காத்திருப்பதில்லை. கிடைத்ததை உட்கொள்வார்கள். அன்பளிப்பாக வந்த எந்த உணவையும் திருப்பியனுப்ப மாட்டார்கள். என்றாலும் மார்க்கத்தில் அனும திக்கப்படாத எந்த உணவையும் அவர்கள் புசிக்க மாட்டார்கள். ரொட்டி கிடைக்காதபோது பேரீச்சம் கனி கிடைத்தால் அதைக் கொண்டே திருப்தியடைவார்கள். சில வேளைகளில் வெறும் ரொட்டி மட்டும் கிடைக்கும். அதையே அவர்கள் உண்டு மகிழ்வார்கள். ஒரு துண்டு ஹல்வா, சிறிதளவு தேன் - இப்படிக் கொஞ்சம் உணவே அவர்களுக்குப் போதும், சில வேளைகளில் பால் மட்டும் கிடைக்கும். அதைப் பருகிப் பசியைத் தணித்துக் கொள்வார்கள். பூசணிக்காயின் உதவியால் அவர்கள் பசி போக்கியதும் உண்டு. உணவருந்தும்போது அவர்கள் சாய்ந்து கொள்ள மாட்டார்கள். அவர்கள் இறையடி சேரும்வரை சேர்ந்தாற்போல் மூன்று நாட்கள் கூட வயிறு நிரம்ப ரொட்டி சாப்பிட்டதில்லையாம்!

திருத்தூர் அவர்கள் வேண்டுமென்றே இவ்வாறு நடந்தார் கள். இதற்கு வறுமையோ, கஞ்சத்தனமோ காரணமல்ல. அவர்களின் வாழ்க்கை முறையை நன்கு ஆராய்ந்தவர்கள் இந்த உண்மையை மறுக்க மாட்டார்கள். ஏனென்றால் அவர்களால்

அதை மறுக்கவே முடியாது. பெருமானார் அவர்கள் விருப்பம் காட்டினால் தங்கக் காசுகளும் வெள்ளி நாணயங்களும் காலடி யில் குவியக் காத்திருந்தன. அள்ளி அள்ளித் தர்மம் செய்யும் ஒருவர் எவ்வாறு கஞ்சத்தனம் படைத்தவராக இருக்க முடி யும்? எனவே அவர்கள் வேண்டுமென்றே சிரமத்தை உண்டாக் கிக் கொண்டார்கள்; எளிய முறையில் வாழ்க்கையை நடத்தி னார்கள். இப்படியெல்லாம் நடந்து அவர்கள் தம் ஆத்மீகச் சுடருக்கு மெருகேற்றினார்கள்.

அண்ணலவர்கள் கல்யாண விருந்திற்குச் செல்வார்கள்; நோயாளியைச் சென்று பார்ப்பார்கள்; மரண நிகழ்ச்சியில் கலந்து கொள்வார்கள்; விரோதிகளுக்கு மத்தியில் தன்னந்தனி யாக நடந்து போவார்கள். இவ்வாறு நடந்து செல்லும் போது அவர்கள் சிறிதும் அச்சப்படுவதில்லை. மமதை இல்லாமல் அமைதியாக வாழ்க்கையை நடத்தினார்கள். உலக நிகழ்ச்சி எதுவும் அவர்களைப் பாதிக்காது. எது குறித்தும் அவர்கள் கலங்கியதில்லை. வெறுப்புக்கும் பீதிக்கும் உரிய எத்த னையோ காரியங்கள் நிகழ்ந்திருக்கின்றன. அப்போதெல்லாம் அவர்கள் குழப்ப வசப்படாமல் பொறுமையோடு செயலாற்று வார்கள்.

பெருமானார் அவர்கள் உடையின் விஷயத்தில் அதிகக் கவனம் செலுத்த மாட்டார்கள். கைவசமுள்ளதை அணிந்து கொள்வார்கள். சில சமயங்களில் பெரிய மேலாடை அணிவார் கள். இன்னும் சில சமயங்களில் யமன் தேசத்தில் தயாரிக்கப் பட்ட செந்நிற மேலாடையை அணிவார்கள். ரோமத்தினா லான நீண்ட சட்டை அணிவதும் உண்டு. ஆனால் அணியத் தகாத எந்த ஆடையையும் அவர்கள் தொடமாட்டார்கள்.

திருத்தூதர் அவர்களிடம் ஒரு மோதிரம் இருந்தது. அது வெள்ளியினால் ஆனது. அதை அவர்கள் வலக்கரத்துச் சுண்டு விரலில் அணிந்து கொள்வார்கள். இடக் கரத்தில் அணிவதும் உண்டு. அவர்கள் எங்கேனும் புறப்பட்டால், நண்பர்கள் பின் தொடர்ந்து வருவார்கள்; அடிமைகள் வருவதும் உண்டு.

குதிரையிலோ, ஒட்டகத்திலோ பிரயாணம் செய்வார்கள். கழுதையிலும் பிரயாணம் செய்திருக்கிறார்கள். துணித் தொப்பி, தலைப்பாகை, மேலாடை எதுவும் இல்லாமல் நகர எல்லை வரை நடந்து சென்றே நோயாளியைப் பார்த்து வருவார்கள்.

வாசனைப் பொருள்களை அவர்கள் பெரிதும் விரும்பினார்கள். எல்லோரையும் போலத் துர்நாற்றத்தை வெறுத்தார்கள். ஏழைகளோடு அமர்ந்து உரையாடினார்கள். எளியவர்களோடு உட்கார்ந்து உணவருந்தினார்கள். பண்புள்ளவர்களை மதித்தார்கள். பந்துக்களை ஆதரித்தார்கள். சிறப்பானவர்களுக்கு உதவி புரிந்தார்கள். சிறப்பம்சம் படைத்தவர்களுக்குப் பெருமதிப்பு அளித்தார்கள். பந்துக்களை விடக் குணத்தில் சிறந்தவர்களுக்கு திருத்தூதரின் உள்ளத்தில் எப்போதும் இடம் இருந்தது. அவர்களை அண்ணலவர்கள் பந்துக்களை விட அதிகமாக விரும்பினார்கள்.

திருநபியவர்கள் எல்லோரையும் தம்முடன் சேர்த்துக் கொண்டார்கள்; யாரையும் இவர்கள் வெறுத் தொதுக்கவில்லை. குற்றத்திற்குப் பிறகு அதற்குச் சமாதானம் கூறப்படும் போது அண்ணலவர்கள் கிண்டிக்கிளற மாட்டார்கள். பெருந்தன்மையோடு ஆமோதித்து விடுவார்கள். அவர்கள் சில சமயங்களில் நகைச்சுவையோடு பேசுவதும் உண்டு. ஆனால் பொய்யுரைத்ததில்லை. அவர்கள் சிரிப்பார்கள். ஆனால் பேய்ச் சிரிப்பு சிரிக்க மாட்டார்கள்.

மார்க்கத்திற்கு முரண்படாத விளையாட்டுக்களைக் கண்டு களித்தார்கள். அவற்றை அவர்கள் தடை செய்வதில்லை! குரலை உயர்த்தி மனைவியரை முந்திக் கொண்டு விளையாட்டுக்கு விரைவார்கள். இத்தகைய காரியங்களில் சிறிதளவு பொழுது போக்குவது தவறல்ல என்பது அவர்கள் கருத்து.

அவர்களிடம் சில ஒட்டகங்களும் சில ஆடுகளும் இருந்தன. அவை கொடுக்கும் பாலின் உதவியால் அண்ணலவர்களும் மனைவியரும் வாழ்க்கையைச் சிக்கனமாக நடத்தினார்

கள். ஒட்டகப் பாலையும் ஆட்டுப் பாலையும் அவர்கள் உணவாகப் பயன்படுத்திக் கொண்டார்கள். தவிர, அவர்களி டம் சில அடிமைகளும் அடிமைப் பெண்களும் இருந்தனர். உணவருந்தும்போதோ உடையணியும்போதோ, அந்த அடி மைகளை அண்ணலவர்கள் கடிந்து கொள்ள மாட்டார்கள். இறை வணக்கத்திலும் மனப்பயிற்சியிலுமே அவர்கள் பொழு தில் பெரும் பகுதி கழிந்தது.

திருநபித் தோழர்கள் சிலருக்குத் தோட்டங்கள் இருந்தன. அந்தத் தோட்டங்களுக்கு அண்ணலவர்கள் சில சமயங்களில் சென்று வருவது வழக்கம். எந்த ஏழையையும், அவனிடம் ஏழ்மை குடிகொண்டிருக்கிறது என்ற காரணத்தால் அவர்கள் இகழ்ந்ததில்லை; எந்த அரசனுக்கும், அவனிடம் அரசுரிமை இருக்கிறது என்ற காரணத்தால் நடுங்கியதில்லை.

மேற்குறிப்பிட்ட சிறந்த பண்புகள் அனைத்தும் ஒன்று திரண்டு அண்ணலவர்களை இறைவழியில் உந்தித் தள்ளின. அண்ணலவர்களுக்கு எழுதவோ படிக்கவோ தெரியாது. அறி யாமை நிறைந்த சமுதாயத்தில் தோன்றிய அவர்கள், ஆடு மேய்க்கும் பொறுப்பை மேற்கொண்டு, அநாதையாக வளர்ந் தார்கள்; தாய் தந்தையற்ற தனி மகனாக வளர்ந்தார்கள். எனினும் இறைவனின் பேரன்பு அவர்களுக்கு எப்போதும் இருந்தது. நற்பண்புகளையும் தூய செயலையும் அவன் அவர்க ளுக்குக் கற்றுக் கொடுத்தான்; நேர்மையான வழி எது என்பதை விளக்கிக் காட்டினான்; முன்னோரின் வரலாறுகளைப் போதித்து வைத்தான்; மறுமையில் வெற்றி தரும் வழி எது என்பதை எடுத்துரைத்தான்... இப்படி அனைத்தும் போதித்து அண்ணலவர்களை அவன் அருங்குண சீலராக்கினான். அவர் களை நாம் பின்பற்றி நடக்கவேண்டும். அதற்குத் தேவையான மனப்பக்குவத்தை இறைவன் நமக்குத் தந்தருள்வானாக!

# 3. மற்றொரு பகுதி

திரு நபியவர்கள் பெரும்பாலும் யாரையும் திட்ட மாட்டார்கள். அப்படி ஏதேனும் சில சமயங்களில் சந்தர்ப்ப வசத்தால் திட்டிவிட்டால் அதற்குரிய அபராதத்தைச் செலுத்தி விடுவார்கள்; திட்டப்பட்டவன் மீது அன்பு செலுத்திப் பரிகாரம் காண்பார்கள். எந்தப் பெண்ணையும் அவர்கள் சபித்தது கிடையாது.

ஒரு சமயம் அவர்கள் போர்முனையில் இருந்தார்கள். எதிரிகளின் அக்கிரமச் செயல்கள் பெருகிக் கொண்டிருந்தன. ''திருத்தூதர் அவர்களே! இப்படி இவர்கள் அட்டூழியம் செய்கிறார்களே, அவர்களைத் தாங்கள் சபிக்கக் கூடாதா?'' என்று யாரோ கேட்டார்கள்.

அந்த அன்பு மனிதர் புன்னகை புரிந்தார்கள். ''நான் மக்கள் மீது அன்பு செலுத்துவதற்காகவே அனுப்பப்பட்டிருக்கிறேன் — அவர்களுக்குப் பாதகமாகப் பிரார்த்திப்பதற்கல்ல!'' என்ற விடை அமைதியோடு வெளிப்பட்டது.

ஒரு மனிதனுக்குப் பாதகமாகப் பிரார்த்திக்குமாறு அண்ணலவர்கள் வேண்டப்பட்டால், அந்த வேண்டுகோளை அவர்கள் நிராகரித்து விடுவார்கள். மாற்றமாக, அந்த மனிதனின் நல்வாழ்வுக்குப் பிரார்த்திப்பார்கள். அந்த மனிதன் முஸ்லிமாக இருந்தாலும் இல்லாவிட்டாலும் அண்ணலவர்கள் இப்படித்தான் நடப்பார்கள். யாரையும் அவர்கள் கைநீட்டி அடித்ததில்லை - இறை வழிக்கு முரண் ஏற்பட்ட நேரத்தைத் தவிர்த்து சுய நலத்துக்காக அவர்கள் யாரையும் அடிக்கத் துணியவில்லை. இறை கட்டளை புறக்கணிக்கப்பட்டாலொழிய அவர்கள் தமக்கு இழைக்கப்பட்ட அநீதிக்காக யாரையும் பழிவாங்கியதில்லை.

இரண்டு காரியங்கள் செய்ய வேண்டிய நிலைமை ஏற்பட்டால் அவற்றில் எளிதானதையே தேர்ந்தெடுப்பார்கள். ஒரு

நிபந்தனை; அந்த எளிதான காரியத்தில் தீமை கலக்காதிருக்க வேண்டும். தீய செயலை விட்டு அவர்கள் வெகுதூரம் விலகியிருந்தார்கள். பந்துக்களை வெறுத்தொதுக்குவது அவர்களுக்குப் பிடிக்காத ஒன்று. தம்மை நாடி வந்தவர்களுக்கு அவர்கள் ஒத்தாசை புரிவார்கள்.

அனஸ் கூறுகிறார்: ''இறைவன் மீது ஆணையிட்டுக் கூறுகிறேன். திருத்தூதரின் வெறுப்பிற்குரிய எந்தச் செயலையும் நான் செய்வதில்லை. ஒரு செயல் குறித்து அவர்கள் தம் வெறுப்பைத் தெரிவித்து விட்டால் அந்தச் செயலை அப்போதிருந்தே விட்டுவிடுவேன். எனது செயல்களில் ஒன்றைக் குறிப்பிட்டுப் பெருமானாரின் மனைவியர் என்னைப் பழிப்பதுண்டு. அந்தச் செயலை விட்டு விடுமாறு பெருமானார் என்னிடம் கூறுவார்கள். திருக்குர்ஆனை வைத்தே அவர்கள் செயலாற்றினார்கள்.''

படுக்கையின் விஷயத்தில் அவர்கள் அவ்வளவாகக் கவனம் செலுத்தவில்லை. உயர்ந்த விரிப்பில்தான் உறங்க வேண்டும் என்ற எண்ணம் அவர்களுக்குக் கிடையாது. பாயில்லாத சமயத்தில் வெறும் தரையில் கூடப் படுத்து விடுவார்கள்.

அண்ணலவர்கள் உலகில் தோன்றுவதற்கு முன்னர் 'தௌறாத்' என்ற இறை நூல் இப்படி வர்ணித்தது: 'முஹம்மது என்ற பெயருடைய திருத்தூதர் என் அடியார், அவரை நான் தேர்ந்தெடுத்திருக்கிறேன். தீய குணம் அவரிடம் கிடையாது. முரட்டுத் தனத்தை அவரிடம் காண முடியாது. கடைத் தெருவில் அவர் சச்சரவு செய்ய மாட்டார். தீங்கிழைக்கப்பட்டால் அவர் சகித்துக் கொள்வார் - மன்னித்து விடுவார், மறந்து விடுவார். அவர் மக்காவில் தோன்றுவார்; மக்காவை வெறுத்து வெளியூர் செல்வார். சிரியாவில் அவர் ஆட்சி விரியும். அவரும் அவரைச் சேர்ந்தவர்களும் மக்களைக் குர்ஆனில் பக்கல் அழைப்பார்கள். அவரைச் சுற்றிலும் அறிவொளி படர்ந்து நிற்கும்.'

'இன்ஜீல்' என்ற தெய்வ நூலும் இப்படித்தான் வர்ணிக்கி

அண்ணலவர்கள் எவரையேனும் சந்தித்தால் - அவர் முஸ்லிமாக இருந்தால்தான் - முதலில் சலாம் சொல்வார்கள். பிறகுதான் மற்ற எந்தப் பேச்சையும் ஆரம்பிப்பார்கள். ஒரு காரியத்தில் தமது நண்பர் ஒருவருக்கு ஒத்தாசை புரிய ஆரம் பித்து விட்டால் அவர்கள் சடைவு கொள்ள மாட்டார்கள்! பொறுமையோடு வேலை செய்வார்கள். அந்த நண்பர் களைத்துப் போனாலும் அண்ணலவர்கள் களைத்துப் போக மாட்டார்கள்.

நண்பர்களைக் கண்டால் கைகுலுக்குவது - இரு கரங்க ளால் கை கோப்பது - அவர்களின் அரும் பண்புகளில் ஒன்று. நீண்ட நேரம் கைகோத்திருப்பார்கள். ஒருவருடன் கை கோக்க ஆரம்பித்து விட்டால், அவர் விடும்வரை அண்ணலவர்கள் கையை விடமாட்டார்கள்! நண்பரின் விரல்களுக்கிடையில் தமது விரல்களை நுழைத்துக் கெட்டியாகப் பிடித்துக் கொள் வார்கள்.

உட்காரும்போதும் எழுந்து நிற்கும்போதும் அவர்கள் இறைவனைத் துதிப்பார்கள். தொழுது கொண்டிருக்கும் போது யாரேனும் அங்கு வந்து உட்கார்ந்து கொண்டால், அண்ணலவர் கள் விரைவாகத் தொழுகையை முடித்துக் கொண்டு எதிரில் வந்து நிற்பார்கள். ''உங்களுக்கு என் உதவி தேவையா?'' என்று வினவுவார்கள். உதவி புரியும் படலம் முடிந்ததும் மீண்டும் இறை வணக்கத்தில் ஈடுபடுவார்கள்.

நண்பர்களுக்கு மத்தியில் அவர்கள் அமர்ந்திருப்பார்கள். அனேக சமயங்களில் கைகளால் கால்களை - முழங்காலுக்குக் கீழே கட்டிக் கொண்டுதான் உட்கார்ந்திருப்பார்கள். மற்றவர்க ளுக்கு இடையூறு ஏற்படும் வகையில் அவர்கள் உட்கார மாட்டார்கள். நண்பர்களுக்கு மத்தியில் அவர்கள் கால்களை நீட்டிக் கொண்டு உட்கார்ந்திருந்ததை யாரும் பார்த்ததில்லை. எனினும் இட நெருக்கடியற்ற விஸ்தாரமான இடத்தில் அப் படி அவர்கள் உட்கார்ந்திருக்கிறார்கள். 'கிப்லா'வை மக்கா வின் தேவாலயத் திசையை முன்னோக்கித்தான் பெரும்பாலும் உட்கார்வார்கள். தம்மை நாடி வந்தவர்களை அவர்கள் கண்ணி

யப்படுத்துவார்கள். தமது துணியைத் தரையில் விரித்து அமரச் சொல்வார்கள். வந்தவர்கள் உறவு முறை அற்றவர்களாயினும் அண்ணலவர்கள் அப்படித்தான் நடப்பார்கள்! சில வேளை களில் தாம் சாய்ந்து கொண்டிருக்கும் தலையணையைக் கொடுத்து உபசரிப்பார்கள். வந்தவர்கள் அதை ஏற்க மறுத்தால் அண்ணலவர்கள் பலவந்தம் செய்வார்கள். வந்தவர்கள் திருத்தூ தரவர்களின் தலையணையை உபயோகித்தே தீரவேண்டிய நிலைமை ஏற்படும்.

அவர்களைச் சாது என்று கருதிய அனைவரும் சிறந்த நற்பண்புள்ளவர் என்றும் எண்ணினார்கள். தம்மோடு அமர்ந்தி ருக்கும் நண்பர்களுக்காக அண்ணலவர்கள் அனைத்தையும் தியாகம் செய்துவிடுவார்கள். மற்றவர்களை அனுசரித்தே அவர் கள் எதையும் பேசுவார்கள்; எதையும் செய்வார்கள். இத்துடன், அவர்களது சபையில் அடக்கம், ஒழுக்கம், நம்பகம் முதலான நற்பண்புகள் நிறைந்து வழிந்தன.

அண்ணலவர்களை இறைவன் இப்படிப் பாராட்டுகி றான்: ''இறைவனின் பேரருளால் நீர் அவர்களிடம் மென்மை யோடு நடந்து கொண்டீர்! நீர் துர்க்குணம் கொண்டவராகவும் முரட்டு சுபாவம் படைத்தவராகவும் இருந்தால் அவர்கள் உம்மை விட்டுப் பிரிந்து போய் விடுவார்கள்.''

நண்பர்களை அழைக்கும்போது திருநபியவர்கள் இயற் பெயரை உபயோகிக்க மாட்டார்கள். தந்தையின் பெயரையோ தனயனின் பெயரையோ இணைத்துத்தான் கூப்பிடுவார்கள். இன்னாரின் தந்தையே, இன்னாரின் மைந்தனே - இப்படித் தான் பெரும்பாலும் கூப்பிடுவார்கள். நட்பு வளர்வதற்கு இதுவும் ஒரு வழியாகும். இதில் கண்ணியமும் உண்டு, இத்தகைய இணைப்புப் பெயர் வழக்கத்தில் இல்லாதவர்களுக் குப் பெயரிட்டு அழைப்பார்கள். பெண்களையும் இப்படித் தான் கூப்பிடுவார்கள். சிறுவர் சிறுமியர்களுக்கும் அவர்கள் பெயரிடுவதுண்டு. இதை அப்போதைய மக்கள் பெரிதும் விரும்பினார்கள்.

பெருமானார் அவர்கள் கோபத்தை ஒதுக்கித் தள்ளி வாழ்ந்தார்கள்; மக்களிடம் அன்போடு பழகினார்கள்; மக்களுக்கு நன்மை செய்தார்கள்; பயனுள்ளவற்றை எடுத்துரைத்தார்கள்.

சபையில் அவர்கள் குரல் உயர்த்தி இரைந்து பேசியதில்லை. பிரசங்கம் புரிய எழுந்து நின்றால், ''தூயநாயனே! உன்னைப் பாராட்டுகிறேன். வணக்கத்திற்குரியவன் நீ ஒருவனே. என்னை மன்னித்தருள்வாயாக. நான் உன்னிடம் பாவ மன்னிப்புக் கோருகிறேன்'' என்று கூறுவார்கள். பின்னர், ''எனக்கு வானவர் ஜிப்ரயீல் கற்றுக் கொடுத்தார்'' என்று பேச்சை ஆரம்பிப்பார்கள்.

# 4. பேச்சும் சிரிப்பும்

பெருமானாரவர்கள் மற்றவர்களை விடச் சுத்தமான அரபி மொழி பேசினார்கள். எல்லோரையும் விட இனிமை யாக உரையாடினார்கள். ''அரபி மக்களிலேயே நான் சுத்தமா கப் பேசுகிறவன்'' என்று அவர்களே கூறியிருக்கிறார்கள். ''ஏனெனில் சுவனவாசிகள் முஹம்மது பேசிய முறையை ஒட்டியே பேசிக் கொள்கிறார்கள்.''

தெளிவான கருத்துடன் அவர்கள் நிறுத்தி நிறுத்திப் பேசு வார்கள். தம் கருத்தை அவர்கள் மெது மெதுவாக வெளியிடு வார்கள். அவர்களின் பேச்சில் தேவையில்லாத எந்த விஷய மும் கலக்காது. அந்தப் பேச்சு கோவை குலையாமல், சிக்கல் இல்லாமல் அமைந்திருக்கும். கோக்கப்பட்ட பளிங்கு மணிக ளைப் போன்று அவர்களின் கருத்துக்கள் தெளிவாகத் தெரியும்.

''நீங்கள் துரிதமாகப் பேசுகிறீர்கள். முன்னுக்குப் பின் சம்பந்தமில்லாதபடிப் பேசுகிறீர்கள். ஆனால் பெருமானாரவர் கள் அப்படிப் பேசமாட்டார்கள். அமைதியுடன் நிறுத்தி நிறுத் திப் பேசுவார்கள்'' — இது அன்னை ஆயிஷாவின் விளக்கம்.

திருத்தூதரவர்கள் எதையும் சுருக்கமாகவே பேசுவார்கள். இதையே வானவர் ஜிப்ரயீல் போதித்துச் சென்றார். சுருக்கமா கப் பேசினாலும் தம் கருத்துக்கள் அனைத்தையும் அவர்கள் ஒன்று சேர வெளியிட்டு விடுவார்கள். அவர்களின் பேச்சில் தேவைக்கதிகமான விரிவுரை இடம்பெறாது. சில விஷயங்க ளைப் பேசி நிறுத்திக் கொள்வார்கள். நண்பர்கள் கவனிக்கிறார் களா, இல்லையா என்று பார்ப்பார்கள். பின்னர் மீண்டும் தொடர்வார்கள்.

அவர்களுக்குக் கம்பீரமான குரல் அமைந்திருந்தது. அதில் மனத்தை ஈர்க்கும் இனிமையும் கலந்திருந்தது.

அவர்கள் பெரும்பாலும் மௌனமாகவே இருந்தார்கள். தேவையில்லாமல் அவர்கள் பேசுவதேயில்லை. பேசத்தகாத எதையும் அவர்கள் பேசமாட்டார்கள். சினம், திருப்தி முதலிய நன்மைகளின் உண்மையைப் போதித்தார்கள். விரசமாகப் பேசுபவர்களை வெறுத்தார்கள். விரசமான கருத்துக்களை விளக்க வேண்டிய நிலைமை ஏற்பட்டால் சூசகமாகவே சுட்டிக் காட்டுவார்கள்.

திருத்தூதர் பேசாத நேரத்தில் நண்பர்கள் பேசிக் கொள் வார்கள்; வாதம் புரிவார்கள். இந்த வாத அரங்கத்திற்குத் திருத்தூதரே நீதிபதி. அவர்களுக்கு எதிரில்தான் தர்க்கம் நடை பெறும். தர்க்கம் முடிந்ததும் அண்ணலாரின் உபதேசம் நடை பெறும். ''திருக்குர்ஆனின் கருத்துக்களை ஒன்றோடொன்று கலந்து குழப்பாதீர்கள்! திருமறை எத்தனையோ நோக்கங்களுக் காக அருளப்பட்டிருக்கிறது.'' என்று அவர்கள் கூறுவார்கள்.

பெரும்பாலும் அவர்களின் முகத்தில் புன்னகையே நில வும். நண்பர்களைப் பார்த்துச் சிரிப்பார்கள். நண்பர்களின் பேச்சைக் கேட்டு அதிசயப்படுவார்கள். நண்பர்களோடு தாமும் கலந்து உரையாடுவார்கள். கடைவாய்ப்பல் தெரியும்ப டியும் அவர்கள் சிரித்திருக்கிறார்கள்.

அண்ணலாருக்கு முன்னால் நண்பர்கள் இரைந்து சிரிக்க மாட்டார்கள். புன்முறுவல் பூப்பார்கள். இது திருத்தூதருக்குக் கொடுக்கப்படும் மரியாதை. திருத்தூதர் அவர்களே அநேக சமயங்களில் புன்முறுவல்தானே செய்கிறார்கள். நண்பர்கள் அதைப் பின்பற்ற வேண்டாமா?

ஒருநாள் கிராமவாசி ஒருவர் வந்தார். அவர் முகம் சினத்தின் காரணமாக விகாரமடைந்திருந்தது. எனவே நபித் தோழர்கள் அவரை வெறுத்தார்கள். திருத்தூதர் முகமலர்ச்சி யோடு பழகும் பண்பு படைத்தவர்களல்லவா? அதே மனிதர் திருத்தூதரிடம் ஏதோ கேட்கத் துடித்தார்.

''நீ ஒன்றும் கேட்க வேண்டாம்! போய்விடும்! உம்மை நாங்கள் வெறுக்கிறோம்'' என்று நண்பர்கள் கூறினார்கள்.

திருநபியவர்கள் இடைமறித்துப் பேசினார்கள். ''அவரை விடுங்கள்! அவர் கேட்கட்டும், இறைவன் மீது ஆணை, அவர் சிரிக்கும்வரை நான் அவரை விடப் போவதில்லை.''

வந்தவர் வினவினார்: ''தஜ்ஜால் என்பவன் ரொட்டியைக் கொண்டு வருவானாம் - நான் கேள்விப்பட்டேன். மக்கள் உணவின்றி மடிந்து போவார்களாம். அந்த ரொட்டியை நான் தொடமாட்டேன். கட்டுப்பாடுடன் செயலாற்றுவேன். அல்லது அதனைப் பறித்து வயிறு முட்டச் சாப்பிட்டு விடுவேன்... இறைவனை நான் நம்புகிறேன். தஜ்ஜாலை வெறுக்கிறேன்.''

இந்தக் கட்டத்தில் தான் அண்ணலவர்கள் கடைவாய்ப்பல் தெரியும்படிச் சிரித்தார்கள். ''முஸ்லிம்களுக்குச் செய்கிற உதவியை இறைவன் உமக்கும் அவசியம் செய்வான். நீர் கவலைப்பட வேண்டியதில்லை!'' என்று அவர்கள் பதிலளித்தார்கள்.

முயற்சியின் அபார சக்தி குறித்து அவர்கள் பிரசங்கம் செய்தார்கள்; இறைவனுக்காகவே சினமுற்றார்கள்; சினத்தின் காரணமாக விபரீதம் எதையும் செய்துவிட மாட்டார்கள். இப்படித்தான் அவர்கள் வாழ்ந்தார்கள்.

ஒரு காரியத்தில் இறங்க வேண்டிய நிலைமை ஏற்பட்டால் அதன் முழுப் பொறுப்பையும் இறைவனிடம் ஒப்படைத்து விட்டு அவர்கள் செவ்வையாகச் செயலாற்றுவார்கள். 'வல்லவனே! நேர்மையை எனக்கு நேர்மையாகக் காட்டுவாயாக! அதை கைக் கொண்டு நடக்கும் ஆற்றலைத் தந்தருள்வாயாக! அற வழியைப் பின்பற்றியொழுகும் மனப்பக்குவத்தை எனக்குக் கொடுத்தருள்வாயாக! முரண்வழியை எனக்கு முரண் வழியாகவே காண்பிப்பாயாக! முரண் வழியை ஒதுக்கித் தள்ளும் துணிவைத் தந்தருள்வாயாக! அபிப்பிராய பேதமுள்ள பிரச்சினைகளில் எனக்குத் தெளிவைக் கொடுத்தருள்வாயாக! உன் அன்பிற்குரியவர்களுக்கு நீ நேர்வழியைக் காட்டுகிறாய்'' என்று பிரார்த்திப்பார்கள்.

# 5. உட்கொள்ளும்போது

பெருமானாரவர்கள் கிடைத்ததை உட்கொள்வார்கள். பலருடன் சேர்ந்து உண்பதைத்தான் அவர்கள் பெரிதும் விரும்பினார்கள். உணவு வந்ததும் ''இறைவனின் திருநாமத்தால்...'' என்பார்கள். ''இறைவனே! இதனை நன்றிக்குரிய உணவாக ஆக்குவாயாக! இதற்கு நாங்கள் செலுத்தும் நன்றியால் கவனத்தின் உணவை அளிப்பாயாக!'' என்றும் கூறுவார்கள்.

கால்களை மடக்கி மிக மரியாதையுடன் உட்கார்ந்தே இவர்கள் சாப்பிடுவார்கள். தொழுகிறவன் எப்படி உட்காருவானோ அப்படித்தான் உட்காருவார்கள். என்றாலும் சிறிது வித்தியாசம். மடக்கப்பட்ட ஒரு காலின் மீது மற்றொரு கால் படிந்திருக்குமாறு உட்காருவார்கள். ''நான் இறைவனின் அடிமை. அடிமைப்பட்ட ஒருவன் எப்படிச் சாப்பிட வேண்டுமோ அப்படியே நான் சாப்பிடுகிறேன்'' என்று தம் செயலுக்கு விளக்கம் தருவார்கள். ''அடிமையான ஒருவன் எப்படி உட்கார வேண்டுமோ அப்படித்தான் நான் உட்காருகிறேன்.''

கொதிக்கும் உணவை அவர்கள் விரும்புவதில்லை. ''இதில் மங்களத் தன்மை கிடையாது'' என்பார்கள். ''இறைவன் நமக்கு நெருப்பையா உணவாகக் கொடுத்திருக்கிறான்? இதிலுள்ள உஷ்ணத்தைத் தணியுங்கள்!'' என்று கூறுவார்கள்.

தமக்கு அருகிலுள்ளதை எடுத்து உட்கொள்வார்கள். சாப்பிடும்போது மூன்று விரல்களைப் பயன்படுத்திக் கொள்வார்கள். நான்காவது விரலைச் சேர்த்துக் கொண்டதும் உண்டு. ஆனால் இரண்டு விரல்களால் அவர்கள் உட்கொண்டது கிடையாது.* இரண்டு விரல்களால் சாப்பிடுவதை அவர்கள் வெறுத்தார்கள். ''அது ஷைத்தானின் முறை'' என்று கூறினார்கள்.

* திருத்தூதரவர்கள் பெரும்பாலும் கோதுமை ரொட்டியே உணவாகக் கொண்டிருந்தார்கள். ரொட்டி சாப்பிடும் போதுதான் அவர்கள் இவ்வாறு நடந்தார்கள். அரிசிச் சோறு அரேபியாவில் அபூர்வம். வாசகர்கள் இதை நன்கு கவனிக்க வேண்டும்.

ஒரு சமயம் உஸ்மான் (ரலி) ஒரு பாத்திரத்தில் ரவைப் பாயாசம் கொண்டு வந்து வைத்தார்கள். பெருமானாரவர்கள் சிறிதளவு சாப்பிட்டார்கள். ''என்ன இது? எப்படி இதைத் தயாரிக்கிறீர்கள்?'' என்று வினவினார்கள்.

''நெய், தேன், ரவை இவற்றின் உதவியால் இதைத் தயாரிக்கிறோம். நெய்யையும் தேனையும் கலந்து கொதிக்க வைக்கிறோம். பின்னர் கோதுமையைப் பொடிப் பொடியாக நொறுக்கிக் கொட்டிச் சூடேற்றுகிறோம். சிறிது நேரத்திற்குப் பிறகு அந்தக் கலவையைக் கிண்டிக் கிளறினால் இப்படி ஆகிவிடும்!'' என்று உஸ்மான் (ரலி) அவர்கள் பதில் அளித்தார் கள்.

''இது நல்ல உணவு' என்று அண்ணலவர்கள் பாராட்டி னார்கள்.

தொலிக் கோதுமையில் தயாரிக்கப்பட்ட ரொட்டியையும் அவர்கள் சாப்பிடுவதுண்டு. சுரைக்காய் சாப்பிடும்போது உப் பைப் பயன்படுத்திக் கொள்வார்கள். பூசணிக்காய் சாப்பிடும் போது ரொட்டியையும் சர்க்கரையையும் சேர்த்துக் கொள்வார் கள்.

ஒரு சமயம் ஒரு கையில் கனியும் மறு கையில் தோலை யும் வைத்துச் சாப்பிட்டுக் கொண்டிருந்தார்கள். அந்தப் பக்கம் ஆடு ஒன்று சென்றது. இடக்கையிலிருந்த தோலையும் கொட் டையையும் காண்பித்தார்கள். ஆடு நெருங்கியது. இடக்கரத்தி லுள்ளதை ஆடு தின்ன, வலக்கரத்திலுள்ளதை அண்ணலவர் கள் சாப்பிட்டார்கள். ஆடு தின்று முடிக்கும் வரை அந்த அன்பு மனிதர் பொறுமையோடு அமர்ந்திருந்தார்கள்.

பெருமானாரவர்கள் பேரீச்சம் கனிகளையும், தண்ணீரை யும் அதிகமாக உட்கொண்டார்கள். பேரீச்சம் கனியைப் பாலு டன் சேர்த்துப் பருகியதும் உண்டு. இவற்றிற்கு, ''நல்லவை - தூய்மையானவை'' என்று அவர்கள் பெயரிட்டார்கள். ரொட்டி சாப்பிடும்போது இறைச்சியையும் சுரைக்காயையும் சேர்த்துக் கொள்வார்கள்.

சுரைக்காயை அவர்கள் பெரிதும் விரும்பினார்கள். ''அது யூனுஸ் நபியினுடையது - அவர்களின் ஆகாரம்'' என்பார்கள். அவர்கள் வேட்டையாட மாட்டார்கள். எவரேனும் வேட்டையாடி வந்து அன்பளிப்பாகக் கொடுத்தால் பெற்றுக் கொள்வார்கள் - சாப்பிடுவார்கள்.

அவர்கள் ரொட்டியுடன் நெய்யைச் சேர்த்துக் கொண்டதும் உண்டு. ஆட்டின் காலையும் ஆட்டின் தோள்பட்டைக் கறியையும் அவர்கள் விரும்பி உட்கொண்டார்கள். விதைக் கோளங்களைச் சாப்பிட மாட்டார்கள். ஏனெனில் அவற்றில் தான் சிறுநீர் உற்பத்தியாகிறது. ஆட்டின் அங்கங்களில் சிலவற்றை அவர்கள் ஒதுக்கித் தள்ளி விடுவார்கள். ஆட்டின் ஆண்குறி, பெண் குறி, சிறுநீரகம், பித்து, சுரளைச் சதை, இரத்தம் முதலியவற்றை அவர்கள் தொடவும் மாட்டார்கள். பூண்டு வெங்காயம் முதலியவை அவர்களுக்குப் பிடிக்காது; ஆனால் எந்தச் சாப்பாட்டையும் அவர்கள் இகழ்ந்ததில்லை.

சாப்பிட்டு முடிந்ததும் அவர்கள் விரல்களைச் சூப்பிக் கொள்வார்கள். ''சாப்பாட்டில் கடைசிப் பகுதியே மங்களத் தன்மை நிறைந்தது'' என்பார்கள். விரல்களைச் சூப்பாமல் கையைத் துணியில் துடைக்கமாட்டார்கள். ''இந்த உணவில் எந்தப் பகுதியில் அருள் இருக்கிறது என்று யாருக்குத் தெரியும்? விரல்களில் ஒட்டிக் கொண்டிருக்கும் பகுதிகளில் கூட இது இருக்கலாம்!'' என்று விளக்கம் தருவார்கள்.

சாப்பாடு முடிந்ததும் இறைவனை இவ்விதம் புகழ்வார்கள். ''புகழ் அனைத்தும் இறைவனுக்கே! வல்ல நாயனே! உன்னை நான் புகழ்கிறேன். நீ எங்களுக்கு உணவும் நீரும் அளித்துப் பரிபாலித்து வருகிறாய்..''

ரொட்டியையும் இறைச்சியையும் சாப்பிட்டால் அவர்கள் கையை நன்றாகக் கழுவிக் கொள்வார்கள். தண்ணீர் குடிக்கும் போது அவர்கள் அமைதியைக் கையாள்வார்கள். ஒரே மூச்சில் குடித்து விட மாட்டார்கள். நிறுத்தி நிறுத்தி மும்முறையாகக் குடிப்பார்கள். ஒவ்வொரு தடவையும் இறைவனின் திருநாமத்தைக் கூறுவார்கள். குடித்து முடிந்ததும் மும்முறை இறைவ

னைப் புகழ்வார்கள். மீதியிருக்கும் தண்ணீரைத் தமக்கு வலப்பு றமுள்ள நண்பரிடம் கொடுப்பார்கள்.

சில சமயங்களில் பெருமானாருக்கு இடப்பக்கத்தில் சிறப் புள்ளவர் எவரேனும் உட்கார்ந்திருப்பது உண்டு. இதுபோன்ற சந்தர்ப்பங்களில் பெருமானாரவர்கள் பண்போடு நடந்து கொள்வார்கள். வலப்பக்கத்து நண்பரிடம், ''உமக்குக் கொடுக்க வேண்டியதுதான் முறை; ஆனால் இவர் சிறப்புடை யவர், நீர் அனுமதித்தால் அவருக்குக் கொடுக்கிறேன்'' என்பார் கள்.

ஒரு சில சமயங்களில் அவர்கள் ஒரே மூச்சில், தண்ணீர் குடித்ததும் உண்டு. இது அரிதான சம்பவம். பெரும்பாலும் அவர்கள் விட்டுவிட்டுத்தான் குடிப்பார்கள். நீருள்ள பாத்திரத் தில் மூச்சுவிட மாட்டார்கள்.

ஒரு நண்பர் ஒரு பாத்திரத்தில் பாலையும், தேனையும் கலந்து கொண்டு வந்தார். அதனை அவர்கள் பருக மறுத்து விட்டார்கள். ''ஒரே பாத்திரத்தில் இரண்டு பானங்கள், ஒன்றுக் கொன்று பொருத்தமானவை... ஆனால் இது எனக்கு வேண் டாம். இது பருகத் தகாதது என்று நான் சொல்லவில்லை. இது எனக்குப் பிடிக்கவில்லை. ஆடம்பரத்தை நான் வெறுக்கி றேன். நாளை இறைவனிடம் நான் பதில் சொல்ல வேண்டி வரும். எளிய வாழ்க்கையையே நான் பெரிதும் விரும்புகி றேன். இறைவனுக்காகத் தணிந்து போனவன்தான் உண்மை யில் உயர்ந்தவன்; அவனை இறைவன் உயர்த்திவிடுவான். ஒருவன் இறைவனுக்கு பணிந்தால் அவனை இறைவன் மற்றவர்களைவிட உயர்வாக்கி விடுவான்.''

திருத்தூதரவர்கள் அநேகமாக வீட்டில் வெட்க உணர்வோ டுதான் இருப்பார்கள். பணியாளிடம் எதையும் வற்புறுத்திக் கேட்கமாட்டார்கள். பணியாள் கொண்டு வந்ததைச் சாப்பிடு வார்கள். கொடுத்ததைக் குடிப்பார்கள்.

ஒருசில வேளைகளில் தாமாக எடுத்துச் சாப்பிட்டதும் உண்டு; தாமாக அள்ளிக் குடித்ததும் உண்டு.

# 6. உடையணியும்போது

சராய், பெரிய மேலாடை, சட்டை, நீள் சட்டை - இப்படி எல்லாவற்றையும் அவர்கள் அணிந்தார்கள். பச்சை நிற ஆடையைப் பார்த்து அவர்கள் ஆச்சரியப்படுவார்கள். பெரும்பாலும் அவர்கள் வெண்மையான ஆடைகளையே உடுத்தினார்கள். ''உயிரோடிருப்பவர்கள் வெண்மையான ஆடைகளை அணியட்டும், பிரேதங்களுக்கும் வெண்மையான துணியிலேயே ஆவன செய்யுங்கள்!'' என்று அவர்கள் கூறியிருக்கிறார்கள்.

போர் முனைக்குச் செல்லும்போதும் மற்ற நேரங்களிலும் மேலாடையை விரும்பி அணிவார்கள். உயர்ந்த ரக மேலாடை ஒன்று அவர்களிடம் இருந்தது. அதை அவர்கள் அணிந்தால், அவர்களின் வெண்மையான மேனிக்கு அதன் பச்சை நிறம் எடுப்பாக இருக்கும். கரண்டைக்கால் தெரியும்படியே எதையும் அணிவார்கள்.

வெள்ளிக் கிழமைத் தொழுகைக்காக அவர்கள் இரண்டு ஆடைகளை ஒதுக்கி வைத்திருந்தார்கள். வெள்ளிக்கிழமை தொழுகைக்கு மற்ற ஆடைகளை உபயோகிக்க மாட்டார்கள். சராய் மட்டுமே அணிந்திருந்ததும் உண்டு. மேலாடையின் இரு தலைப்புகளையும் இழுத்துத் தமது புஜங்களைப் போர்த்திக் கொள்வார்கள். இந்த உடையில் சில சமயம் பிரேத அடக்கப் பிரார்த்தனை நடத்தியிருக்கிறார்கள். ஒரே ஆடையுடன் அவர்கள் வீட்டில் தொழுதிருக்கிறார்கள்.

அவர்களிடம் கறுப்புத் துணி ஒன்று இருந்தது. ''அந்தக் கறுப்புத் துணியை என்ன செய்தீர்கள்?'' என்று உம்மு சல்மா கேட்டார்.

''அணிந்து கொண்டேன்!'' என்று அவர்கள் பதில் கூறினார்கள்.

''திருத்தூதர் அவர்களே! தங்களின் வெண்மையான மேனிக்கு அந்தக் கறுப்புத் துணி மிக எடுப்பாக இருந்தது...'' என்று உம்மு சல்மா கூறினார்.

''ஒரே துணியின் உதவியால் பெருமானார் அவர்கள் எங்களுக்கு மத்தியானத் தொழுகையை நடத்தியுள்ளார்கள்'' என்று அனஸ் சான்று சொல்கிறார்.

அவர்கள் சில சமயம் மோதிரத்தில் நூலைச் சுற்றி வைப் பார்கள். அந்த நூலின் உதவியால் மறந்து போன காரியத்தை நினைவுக்குக் கொண்டு வந்து செயலாற்றுவார்கள். அந்த மோதிரத்தால் கடிதங்களுக்கு முத்திரையிடுவார்கள். ''முத் திரை வைப்பதால் விபரீதம் தடுக்கப்படுகிறது. இதனால் சந்தேகம் நொறுங்குகிறது'' என்று விளக்குவார்கள்.

தலைப்பாகைக்கு அடியில் துணித் தொப்பி அணிவார்கள். தலைப்பாகை இல்லாமல் தொப்பி அணிவதும் உண்டு. சில வேளைகளில் தலையையும் நெற்றியையும் சேர்த்துத் துணி யைச் சுற்றிக் கொள்வார்கள்.

'ஸஹப்' (கார்முகில்) என்னும் பெயருடைய தலைப் பாகை ஒன்று அவர்களிடம் இருந்தது. அதை அவர்கள் அலீ (ரலி) அவர்களுக்கு அன்பளிப்பாகக் கொடுத்து விட்டார்கள். அறிஞர் அலீ (ரலி) அவர்கள் சில சமயம் அதனை அணிந்து வருவார்கள். அப்போதெல்லாம் பெருமானாரவர்கள், ''அலீ கார்முகிலுடன் உங்களிடம் வந்திருக்கிறார்'' என்று சிலேடை யாகக் கூறுவார்கள்.

வலப்பக்கமிருந்து ஆடையை அணியத் தொடங்குவார் கள். ''இறைவனைப் புகழ்கிறேன். அவன் எனக்கு ஆடையைக் கொடுத்தான். அதன் உதவியால் மானத்தை மறைத்துக் கொள்கி றேன்; மக்களுக்கிடையில் என்னை அழகுபடுத்திக் கொள்கி றேன்'' - இப்படிக் கூறுவார்கள்.

ஆடைகளைக் களையும்போது இடப்பக்கமிருந்து ஆரம் பிப்பார்கள். புதுத் துணி ஒன்று அணிந்தால், பழைய துணி ஒன்றைத் தர்மம் செய்து விடுவார்கள். ''ஒருவன் ஒரு முஸ்லி முக்குத் துணியைத் தர்மம் செய்தால், அவனுக்காக இறைவன்

இம்மையிலும், மறுமையிலும் பொறுப்பேற்றுக் கொண்டு விடுவான்...!'' என்று விளக்கினார்கள்.

அவர்களிடம் தோலினாலான விரிப்பு ஒன்று இருந்தது. ஏறத்தாழ அது மூன்றடி நீளம் இருந்தது. அகலம் ஏறக்குறைய இரண்டடி மூன்று அங்குலம். அந்த விரிப்பின் உட்பகுதியில் பேரீச்சமரச் சிம்பு திணிக்கப்பட்டிருந்தது. இதைத்தான் அவர்கள் மெத்தை எனக் கொண்டிருந்தார்கள். அதில் திருப்தியைக் கண்டார்கள். அவர்கள் வாழ்க்கைக்குத் தேவையான எல்லாவற்றையும் செய்தார்கள். எல்லோரையும் போல் உண்டார்கள்; உறங்கினார்கள். ஆனால் ஆடம்பரப் பாதையில் அவர்கள் மனம் செல்ல மறுத்து விட்டது. அவர்கள் விரும்பியிருந்தால் எத்தனையோ செய்திருக்கலாம். எனினும் அவர்கள் விரும்பவில்லை. எளிய வாழ்க்கையையே அவர்கள் பெரிதும் விரும்பினார்கள். அதில்தான் அவர்கள் தித்திப்பைக் கண்டார்கள்.

தம்மிடமிருந்த மேலாடை ஒன்றை அவர்கள் தரையில் விரித்து உபயோகப்படுத்துவார்கள். வெறும் பாயைத் தரையில் விரித்துப் படுத்து உறங்குவார்கள். பஞ்சு மெத்தையைப் பற்றியோ, பஞ்சணையைப் பற்றியோ அவர்கள் கவலைப்படுவதில்லை.

அவர்களிடம் குறிப்பிடத்தக்க நல்ல அம்சம் ஒன்று இருந்தது. தம்மிடமுள்ள எல்லாப் பொருள்களுக்கும் அவர்கள் பெயரிட்டார்கள். தமக்குச் சொந்தமான கால்நடைகள், போர்க்கருவிகள் முதலியவற்றிற்கும் அவர்கள் பெயர் சூட்டினார்கள்.

இஸ்லாத்தின் கொடிக்கு அவர்கள் 'இகாப்' (தண்டனை) என்று பெயரிட்டார்கள். போர் முனைக்கு எடுத்துச் செல்லும் வாளுக்கு 'துல்பகார்' என்று பெயர் வைத்தார்கள்.* 'முதுகெலும்பு படைத்தது' என்று அதற்குப் பொருள். இதைத் தவிர, 'மிக்தம்' என்று ஒரு வாள் இருந்தது. மிக்தம் என்றால் துண்டிக்கும் கருவி என்பது பொருள். இன்னும் இரண்டு

---

* அறிஞர் அலியிடம் ஒரு வாள் இருந்தது. அதன் பெயரும் துல்பகார்தான். அண்ணலவர்களால் அது அன்பளிப்பாகக் கொடுக்கப்பட்டது என்று சில வரலாற்று ஆசிரியர்கள் குறிப்பிடுகிறார்கள்.

வாள்கள் இருந்தன. அவற்றிற்கு முறையே 'ரசூப்' (ஆழமாகப் பதிந்து வெட்டக் கூடியது) 'கலீப்' (துரிதமாக வெட்டும் வாள்) என்று பெயர் சூட்டப்பட்டது. அவர்களின் வாளுக்கு வெள்ளி யிழையோடிய பிடி போடப்பட்டிருந்தது.

தோலினாலான இடுப்பு வாரை அவர்கள் அணிந்து கொள்வார்கள். அதில் மூன்று வெள்ளி வளையங்கள் கோக்கப் பட்டிருந்தன. போர் முனையில் அம்பு வீசுவதற்காக ஒரு 'நாண்' இருந்தது அவர்களிடம். அந்த நாண் 'கதூம்' என்ற பெயரைத் தாங்கிக் கொண்டது. 'மர்மங்களை மறைந்துக் காப்பது' என்பது அதற்கு பொருள். தமது ஒட்டகத்திற்கு 'குஸ்வர' என்று பெயர் கொடுத்தார்கள். கடைசி எல்லை என்பது இதன் பொருள். அவர்களின் கோவேறு கழுதைக்கு 'துல்துல்' என்று பெயர் சேர்க்கப்பட்ட து. 'மகத்தான் காரியம்' என்று பொருள். துல் துல் என்ற வார்த்தைக்கு முள்ளம் பன்றி என்று ஓர் அர்த்தமுண்டு. முள்ளம் பன்றி உறுதியானது. அதனை எதிர்த்து வெற்றி காண்பது சிரமம். உறுதி வாய்ந்த அதன் முட்கள் எதிரியின் சதையைக் கிழித்தெறிந்து விடும். இந்தக் கருத்து மேலே சிலேடையாகக் காட்டப்படுகிறது.

அவர்களின் கழுதை 'யஅபூர்' (மான்) என்னும் பெயரை வாங்கிக் கொண்டது. மானைப்போல் அந்தக் கழுதை விரைந்து செல்லும் என்பது உட்கருத்து.

அவர்களிடம் ஓர் ஆடு இருந்தது. அதன் பாலை அவர்கள் பருகி வந்தார்கள். அந்த ஆட்டுக்கு 'ஈனா' (சிறந்தது) என்று பெயர் சூட்டினார்கள்.

அவர்களிடம் ஒரு பாத்திரம் இருந்தது. அதில் நீரை எடுத்து கை, கால், முகம் கழுவிக் கொள்வார்கள்; குடிப்பார் கள். பெற்றோர் தமது குழந்தைகளை அவர்களிடம் அனுப்பு வார்கள். சிறுவர் சிறுமியர் ஓடி வந்து அவர்களைச் சூழ்ந்து கொள்வார்கள். அவர்களை விரட்ட மாட்டார்கள். அந்தப் பாத்திரத்தில் நீர் இருந்தால் சிறுவர் சிறுமியர் குடிப்பார்கள்; முகத்திலும் உடல் முழுவதிலும் தடவிக் கொள்வார்கள். இறையருள் ஏற்பட வேண்டும் என்பதற்காகவே இவ்வாறு செய்வார்கள். இவையெல்லாம் முன் கூட்டியே பெற்றோர்கள் கற்றுக் கொடுத்து விடுவார்கள்.

# 7. மன்னிக்கும் மனப்பான்மை

பெருமானாரிடம் பெருந்தன்மைகள் இயற்கையிலேயே அமைந்திருந்தன. தமக்கு இழைக்கப்பட்ட எந்தத் தீமையையும் அவர்கள் மன்னித்து விடுவார்கள். மக்களிலேயே அவர்கள் சிறந்த பொறுமையாளராக விளங்கினார்கள். எதிரியைத் தண்டிப்பதற்கு வேண்டிய ஆற்றல் இருந்தும் அவர்கள் எத்தனையோ பேரை மன்னித்திருக்கிறார்கள். எதிர்க்கும் ஆற்றல் இல்லாதபோது மன்னிப்பது சாதாரண காரியம். இதை யாரும் செய்யலாம்; இதில் பெருமையுமில்லை. எதிர்க்கும் சக்தி இருக்கும் போது மன்னிப்பதுதான் பாராட்டுக்குரிய செயல். இந்த சிறப்பம்சம் அண்ணலாரிடம் பூரணமாக இடம் பெற்றிருந்தது.

ஒரு சமயம் பெருமானாருக்கு எதிரில் தங்க நகைகளும் வெள்ளி நகைகளும் குவிக்கப்பட்டிருந்தன. போர் முனையிலிருந்து அவை கிடைத்திருக்க வேண்டும். அவற்றை அவர்கள் தங்கள் நண்பர்களுக்கிடையில் பாகம் பிரித்தார்கள்.

இந்தக் கட்டத்தில் தான் எதிர்பார்க்க முடியாத நிகழ்ச்சி ஒன்று நடந்தது. கிராமவாசி ஒருவர் திடீரென்று எழுந்து நின்றார். பெருமானாரை ஒரு சுயநலமி என்று அவர் எண்ணி விட்டாரோ, என்னவோ!

''முஹம்மதே! நியாயத்தோடு நடந்து கொள்ளுமாறு இறைவன் உமக்குக் கட்டளையிட்டிருக்கிறான். ஆனால் அந்தக் கட்டளைப்படி நீர் நடப்பதாகத் தெரியவில்லையே'' என இரைந்தார் அவர்.

அண்ணலவர்கள் சினம் கொள்ளவில்லை. ''நீர் தப்புக் கணக்குப் போடுகிறீர். நானே நீதியையும் அறநெறியையும் கடைப்பிடிக்காவிட்டால் வேறு யார்தான் கடைப்பிடிப்பார்கள்?'' என்று அமைதியாகப் பதிலளித்தார்கள். பெருமானாரை யாரும் குறை கண்டதில்லை. அத்துணை சுத்தமாக அவர்கள்

நடந்தார்கள். தம்மீது அநியாயமாகச் சுமத்தப்பட்ட பழிகளை அவர்கள் பொருட்படுத்தியதே இல்லை.

★ ★ ★

கைபர் போர் முனையில் பிலாலின் ஆடையில் வெள்ளிச் சாமான்கள் நிரப்பப்பட்டிருந்தன. அவற்றை பெருமானார் பங்கு போட்டுக் கொண்டிருந்தார்கள்.

''திருத்தூதர் அவர்களே! நியாயமாக நடந்து கொள்ளுங்கள்!'' என்று சொன்னார் ஒருவர். நியாயத்தை யாரும் அவர்களுக்கு சொல்லிக் கொடுக்க வேண்டியதில்லை. இறைவன் அவர்களுக்கு அதை முன்னரே கற்றுக் கொடுத்து விட்டான். எனவே அவர்கள் எப்போதும் நியாயத்தோடுதான் நடந்தார்கள். அந்த நண்பரின் மனம் ஏனோ குறுகுறுத்தது. வீசிவிட்டார் சில வார்த்தைகளை.

பெருமானாருக்குக் கோபம் வரவில்லை. ''நானே நியாயத்தோடு நடக்காவிட்டால் வேறு யார்தான் நியாயத்தோடு நடப்பார்கள்? நான் முறை தவறி நடந்தால் அது உம்மையும் பாதிக்கத்தானே செய்யும். உம்மைப் பாதிக்கும் காரியம் என்னையும் பாதிக்கக் கூடியதுதான். ஏனெனில் நீர் என் நண்பர்'' — எத்துணை சாதுரியமான விடை!

பெருமானாருக்குக் கோபம் வரவில்லைதான். என்றாலும் அவர்களின் வார்த்தைகள் உமர் (ரலி) அவர்களைக் கொதித்தெழச் செய்து விட்டன. இடுப்புக்கும் தோளுக்குமாகக் குறுக்கே நீண்டிருந்த வாளை அவர்களின் வலக்கரம் பற்றிப் பிடித்தது. ''என்ன வார்த்தைகள்! அனுமதி கொடுங்கள்! இவன் தலையைச் சீவி எறிந்து விடுகிறேன், இவன் ஒரு நயவஞ்சகன், உண்மை முஸ்லிமல்ல..'' என்று துடித்தார்கள்.

திருநபியவர்கள் புன்னகை புரிந்தார்கள். ''வேண்டாம், பதறாதீர்! நான் என் நண்பர்களையே கொலை செய்கிறேன் என்று மக்கள் பேசிக் கொள்ளப் போகிறார்கள்'' என்று கூறினார்கள்.

ஒரு போர் முனையில் நடந்த சம்பவம் இது: பெருமானார், நண்பர்களை விட்டுப் பிரிந்து விட்டார்கள். இந்தச் சந்தர்ப்பத்தைப் பயன்படுத்திக் கொண்டு எதிரில் வந்து நின்றார் ஒருவர். அவர் விரோதிப் படையைச் சேர்ந்தவர். வாளை ஓங்கிப் பிடித்துக் கொண்டு அவர் இப்படிக் கொக்கரித் தார்: ''இப்போது உம்மை என்னிடமிருந்து யாரால் காப்பாற்ற முடியும்? உம்மை யார் காப்பாற்றப் போகிறார்கள்?''

பெருமானாரவர்கள் சரியாகச் சிக்கிக் கொண்டார்கள் என்பது அவர் எண்ணம். திகிலால் தடுமாறுவார்கள் என்று அவர் எதிர்பார்த்தார்.

''இறைவன்!'' என்று துணிவுடன் பதில் வந்தது, ''அவன் என்னைக் காப்பாற்றுவான்!'' என்று பதில் தொடர்ந்தது.

இந்த விடையை அவர் எதிர்பார்க்கவில்லை. ஒரு கணம் அதிர்ச்சி. மறுகணம் அந்த அதிர்ச்சி கையிலுள்ள வாளை வீழ்ச்சிக்குள்ளாக்கியது. சற்று முன் பெருமானாரின் சிரத்திற்கு மேலே உயர்ந்து நின்ற அந்த வாள் இப்போது மண்ணில் கிடந்தது. கால் விநாடியில் பெருமானாரவர்கள் அந்த வாளை எடுத்துக் கொண்டு விட்டார்கள்.

எதிரியின் அதிர்ச்சி இன்னும் நீங்கவில்லை.

''இப்போது நீர் எனக்குப் பதில் சொல்லும்! இப்போது உமக்குத் துணை யார்? என்னைத் தடுத்து நிறுத்தி உம்மைக் காப்பாற்றுவது யார்?'' என்று பெருமானார் கேட்டார்கள்.

அந்த மனிதர் செய்வதறியாது, சொல்வதறியாது தவித்தார். அர்த்தமில்லாத வார்த்தைகளை அவர் உதடுகள் வெளியிட்டன. தம் தவற்றுக்கு மன்னிப்பு கேட்பது போல் அவர் முறையிட் டார்.

''சரி போகட்டும்! வணக்கத்திற்குரியவன் இறைவன் ஒரு வனே என்று கூறும்! நான் அவன் தூதர்...'' என்று பெருமானார் கூறினார்கள்.

இதை அவர் ஒப்புக் கொள்ளத் தயங்கினார். ''நிச்சயமாகக் கூறுகிறேன். என் கூற்றைத் தாங்கள் தாராளமாக நம்பலாம்.

இனிமேல் தங்களுக்கு எதிராக நான் ஒருபோதும் வாளேந்த மாட்டேன். தங்களுடன் சேரவும் நான் விரும்பவில்லை. தங்களுக்கு எதிராகவும் நான் செயலாற்றவுமாட்டேன். என் வேலையைப் பார்த்துக் கொண்டு போகிறேன். தயவு செய்து என்னை விட்டு விடுங்கள்!'' என்று அவர் சொன்னார்.

முறையீட்டைப் பெருமானார் ஏற்றுக் கொண்டார்கள். அவர் மன்னிக்கப்பட்டார். பின்னர் அவர்கள் தம் நண்பர்களிடம் வந்தார்கள்; ''மக்களிடையே நல்ல மனிதர் ஒருவரிடமிருந்து இப்போது நான் வருகிறேன்!'' என்றார்கள். முஸ்லிம், முஸ்லிமல்லாதவன் என்ற வேற்றுமையின்றி எல்லோரையும் அவர்கள் மன்னித்தார்கள் என்பதற்கு இது சரியானதோர் எடுத்துக்காட்டு.

யூத மாது ஒருத்தி, அவர்களுக்குச் சமைத்த ஆடு ஒன்றை அன்புக் காணிக்கையாகக் கொண்டு வந்தாள். அதில் அவள் முன்கூட்டியே விஷத்தைக் கலந்து வைத்திருந்தாள். அதை அவர்கள் உட்கொண்டு மடிய வேண்டும் என்பது அவள் திட்டம். ஆனால் அவர்கள் இதைக் கண்டு பிடித்து விட்டார்கள். அது சம்பந்தமாக அந்தப் பெண் மணியையே வினவினார்கள்.

''உம்மை ஒழித்துக் கட்ட வேண்டும் என்பது என் திட்டம்! எனவே விஷத்தைக் கலந்தேன்!'' என்று சாதாரணமாக அவள் கூறினாள்.

''என்னை ஒழித்துக் கட்டவா? அந்தப் பொறுப்பு உனக்கு இல்லையே, அந்த வேலையை இறைவன் உன்னிடம் விடவில்லையே!'' — இது பெருமானாரின் பதில்.

நண்பர்கள் பொங்கி எழுந்தார்கள். ''சீவி விடுகிறோம் இவள் தலையை, அனுமதி கொடுங்கள்!'' என்று இரைந்தார்கள்.

பெருமானாரின் விடை ஒரே வார்த்தையில் வெளிவந்தது: ''வேண்டாம்!''

''இந்த சம்பவத்தை நபித் தோழர் அனஸ் விவரிக்கிறார்.

★ ★ ★

யூதர் ஒருவர் பெருமானாருக்குச் செய்வினை செய்துவிட்டார். திகனால் அவர்களிடம் சில மாறுதல்கள் ஏற்பட்டன.

வானவர் ஜிப்ரயீல் உண்மையைக் கூறினார்: அந்த யூதரையும் காட்டிக் கொடுத்தார், பிறகு அந்தச் செய்வினையை முறிப்ப தற்கு வேண்டிய ஏற்பாடுகள் நடந்தன. பெருமானார் நலம் பெற்றார்கள்.

இங்கு ஒரு விஷயம் நம் கவனத்திற்குரியது. குற்றவாளி யான யூதரை அண்ணலவர்கள் தெரிந்து கொண்டாலும் அவரி டம் எதுவும் கேட்கவில்லை; தமது நண்பர்களுக்கு அவரது பெயரைச் சொல்லவில்லை; அவரை வஞ்சம் தீர்க்கவுமில்லை. எத்துணை மேலான பண்பு!

ஒரு சமயம் அறிஞர் அலீ, ஸுபைர், மிக்தாத் ஆகிய மூவரும் விரைந்து போய்க் கொண்டிருந்தார்கள். 'பெருமானார் தாம் அவர்களை அனுப்பியிருந்தார்கள். 'நீங்கள் 'காக்' என்ற பூங்காவிற்கு விரைந்து செல்லுங்கள்! அங்கு பெண் ஒருத்தி ஒளிந்து மறைந்து சென்று கொண்டிருக்கிறாள். அவளிடம் ஒரு கடிதம் இருக்கிறது. அது முஸ்லிம்களுக்குப் பாதகமாகவே எழுதப்பட்டிருக்க வேண்டும். அதைப் பறித்து வாருங்கள்!'' — இது திருத்தூதரின் தற்காப்புக் கட்டளை.

காக் தோட்டத்தினருகில் லயீனா கண்டுபிடிக்கப்பட்டாள்.

''கடிதம் எங்கே? கொடு எங்களிடம்!''

லயீனா வீசியெறிந்து பேசினாள். ''கடிதமா! என்ன கடி தம்? என்னிடம் எந்தக் கடிதமும் கிடையாது!''

நபித் தோழர்கள் மிரட்டினார்கள். மரியாதையைக் கெடுத் துக் கொள்ளாதே! கடிதம் வராவிட்டால், உன் ஆடைகளைக் களைந்தெறிந்து சோதனையிட வேண்டிவரும். மரியாதையைக் குலைத்துக் கொள்ளாதே'' - பயமுறுத்த வேண்டிய கட்டத்தில் பயமுறுத்துவதுதானே முறை.

என்ன இருந்தாலும் அவள் ஒரு பெண். நபித் தோழர்க ளின் பேச்சைக் கேட்டு பயந்து விட்டாள். சற்றுத் தயக்கம், பின்னர், சுருட்டிக் கட்டப்பட்டிருந்த சடையிலிருந்து ஒரு கடிதத்தை வெளியில் எடுத்தாள்.

கடிதம் பெருமானாரிடம் சமர்ப்பிக்கப்பட்டது. நண்பர் கள் சூழ்ந்து நின்றார்கள்.

''மக்காவிலுள்ள விக்கிரக ஆராதனைக்காரர்களுக்கு மதீ னாவிலுள்ள ஹாதிப் எழுதிக் கொண்டது'' என்று கடிதம்

ஆரம்பிக்கப்பட்டிருந்தது. ஹாதிப் என்பவர் பெருமானாரின் நண்பர்களில் ஒருவர் என்பதை இங்கு நாம் நினைவுகூர வேண்டும். அவர் சூழ்ச்சியில் இறங்கி விட்டாரா?

கடிதம் மேலே ஓடுகிறது: திருத்தூதரின் நடவடிக்கைகள் சிலவற்றை இக் கடிதத்தின் மூலம் தங்களுக்கு நான் தெரியப்ப டுத்த விரும்புகிறேன்...'' துரோகச் செயல்! மன்னிக்க முடியாத குற்றம்!

எப்போதும்போல உமர் (ரலி) அவர்கள் கொதித் தெழுந் தார்கள். ''நயவஞ்சகன்; அண்டிக்கழுத்தறுப்பவன்; துரோகி, திருத்தூதர் அவர்களே! ஒரு வார்த்தை சொல்லுங்கள்! இவ னைத் தீர்த்துக் கட்டிவிடுகிறேன். உயிரோடிருக்க இவனுக்கு விருப்பமில்லை...''

பெருமானார் பதறவில்லை. அமைதியின் சிகரமல்லவா! ''ஹாதிப்! இதெல்லாம் என்ன? ஏன் இந்தக் காரியத்தில் இறங்கினீர்?'' என்று கேட்டார்கள்.

ஹாதிப் தயக்கத்துடன் பேசினார்: ''அண்ணலவர்களே! அவசரப்படாதீர்கள்! என் நிலை தங்களுக்குத் தெரியும். நான் பந்துக்களுடன் நெருங்கிப் பழகினேன். என் உறவினர்களுக்கு நான்தான் துணை. இப்போது என் மனைவி மக்கள், உற்றார் உறவினர் மக்காவில் இருக்கின்றனர். அவர்களுக்கு ஆதரவு கிடையாது. ஏனெனில் நான் தங்களோடு மதீனாவில் இருக்கி றேன்... நண்பர்கள் என் மீது சினம் கொள்கிறார்கள். மற்றவர் கள் நல்வழியில் செல்லும்போது நான் மட்டும் ஏன் இந்தக் குறுக்கு வழியில் இறங்கினேன் என்று அவர்கள் குழம்புகிறார் கள். என்னைத் துரோகி என்று நினைக்கிறார்கள்.''

உமர் அவர்களின் சினம் இன்னும் குறையவில்லை.

ஹாதிப் தொடர்ந்தார்: ''உண்மையைச் சொல்லி விடுகி றேன். நான் துரோகியல்ல. இஸ்லாத்தின் மீது எனக்கு வெறுப் புக் கிடையாது. விக்கிரக ஆராதனையை நான் வெறுக்கிறேன். என்னைப் போலவே மக்காவிலிருந்து மதீனாவிற்கு வந்தவர் கள் பலர். அவர்களின் நிலைமை வேறு; என் நிலைமை வேறு. அவர்களுக்கு மக்காவில் மனைவி மக்கள் இருக்கிறார்கள்.

ஆனால் அதே சமயத்தில் அவர்களைக் கவனித்துக் கொள்வ தற்கு மற்ற உறவினர்களும் அங்கு இருக்கிறார்கள். என் நிலைமை இப்படி இல்லை. என்னை விட்டால் என் குடும்பத் தாருக்கு வேறு கதியில்லை. ஆகவே இப்படி எதையாவது எழுதியனுப்பிக் கொண்டிருந்தால் அங்கு என் குடும்பத்தா ருக்கு ஆதரவு கிடைக்கும் என்று எண்ணினேன். நான் இஸ்லா மிய வட்டத்தை விட்டு வெளியேறி விட்டதாக எண்ணி விடவேண்டாம்! நான் எப்போதும் முஸ்லிம்தான்.''

உமர் அவர்கள் இன்னும் அமைதி அடையவில்லை. மற்ற நண்பர்களும் கொதித்துக் கொண்டுதான் இருந்தார்கள். கொதிக்க மாட்டார்களா? இத்துணை பெரிய குற்றத்தை மன் னிப்பதற்கு எத்துணை ஆழமான மனப்பண்பு தேவை!

பெருமானார் தீர்ப்பளித்தார்கள். ''இவர் உங்களில் உண் மையாளர்!''- தண்டனைக்குப் பதில் பாராட்டுரை! ''இஸ்லாத் திற்காக இவர் பெரும் தியாகம் செய்திருக்கிறார். பத்ர் யுத்தத் தில் நம்மோடு சேர்ந்து போர் புரிந்தார். பத்ர் யுத்தத்தில் கலந்து கொண்டவர்களின் சிறப்பு மேலானது.''

★ ★ ★

ஒரு சமயம் பெருமானார் அவர்கள் போர் முனைப் பொருள்களைப் பங்கு வைத்துக் கொண்டிருந்தார்கள். மதீனா வாசி ஒருவர் ''இது இறைவழிக்குப் பொருத்தமற்ற பிரிவினை, இதில் நீதியில்லை'' என்று கூறினார். அவர் மெதுவாகத்தான் கூறினார். நண்பர்கள் செய்தியைப் பெருமானாருக்கு எட்டச் செய்து விட்டார்கள்.

பெருமானாரின் முகம் சிவந்தது. ''என் சகோதரர் மூஸா வின் ஆத்மாவிற்கு இறைவன் அருள்பாலிப்பானாக! திருத்தூத ரான அவர் மீது இதைவிடப் பெரிய பழிகளை எல்லாம் மக்கள் சுமத்தினார்கள். ஆனால் அவர் பொறுமையோடு செயலாற்றி னார்.''

அண்ணலவர்கள் அடிக்கடி இப்படிக் கூறுவார்களாம்: ''என் நண்பர்களைப் பற்றிய அவதூறுகளை யாரும் என்னிடம் கூறவேண்டாம்! சுத்தமான மனத்தோடு உங்கள் எல்லோரிட மும் நான் பழக விரும்புகிறேன்.''

# 8. வெறுப்பிற்குரியது நிகழ்ந்தால்

திருத்தூதரவர்கள் மென்மையான மனம் பெற்றிருந்தார்கள். யாரையும் அவர்கள் புண்படுத்துவதில்லை. அவர்களுக்கு உள்ளும் புறமும் தூய்மையாக அமைந்திருந்தன. அவர்களின் உள்ளம் தெளிவானது, உள்ளத்தைப்போலவே அவர்கள் முகமும் தெளிவாக இருந்தது. சினமும் மகிழ்ச்சியும் அந்த மதி முகத்தில் தெளிவாகப் பிரதிபலித்தன. மனத்தின் உணர்ச்சிகள் அந்த மதிவதனத்தில் சுத்தமாகத் தெரிந்தன. கோபத்தோடு இருக்கிறார்களா, அவர்களின் மனக்கடலில் மகிழ்ச்சி அலை மோதுகிறதா என்பதை அவர்களின் முகத்தைப் பார்த்தே தெரிந்துகொண்டு விடலாம். அத்துணை தெளிவாக இருந்தது அந்த முகம். மனத்தைப் பிரதிபலிக்கும் சுத்தமான கண்ணாடி அது.

சினம் அதிகரித்துவிட்டால் அவர்கள் தமது நீண்டதாடியைத் தடவிவிட்டுக் கொள்வார்கள். அவர்கள் விரும்பாத செயலை ஒருவர் அவர்களுக்கு எதிரில் செய்தால் பொறுத்துக் கொள்வார்கள். அவர் மனத்தைப் புண்படுத்த மாட்டார்கள்.

ஒருவர் பெருமானாரிடம் வந்தார். அவர் முகம் ஏனோ விகாரமாக இருந்தது. அந்த முகத்தில் மலர்ச்சியைக் காண முடியவில்லை. பசியோ, சினமோ, வெறுப்போ இதற்குக் காரணமாக இருக்க வேண்டும். பெருமானார் இதை வெறுத்தார்கள். ஆனால் அந்த மனிதரிடம் அதுபற்றி அவர்கள் ஒன்றும் சொல்லவில்லை.

சற்று நேரத்தில் வந்தவர் போய்விட்டார்.

பெருமானார் நண்பர்களுக்குக் கூறினார்கள்: ''முகத்தை மலர்ச்சியுடன் வைத்துக் கொள்ளுமாறு நீங்கள் அவரிடம் கூறியிருந்தால் நன்மையாக இருந்திருக்கும்.

ஒரு சமயம் திருத்தூதர் பள்ளியில் இருந்தார்கள், நண்பர்களும் அமர்ந்திருந்தார்கள். கிராமவாசி ஒருவர் திடீரென்று பள்ளிக்குள் வந்தார். பள்ளியில் சிறுநீர் கழிக்க ஆரம்பித்துவிட்டார்.

நண்பர்கள் பாய்ந்து வந்தார்கள். ''அவரைத் தடுக்காதீர்கள். சிறுநீர் முழுவதையும் கழித்து முடிக்கட்டும். இடையில் தடை செய்யாதீர்கள்!''- இது பெருமானாரின் பண்புக்கட்டளை.

கிராமவாசி தம் வேலையைக் குறையின்றி முடித்துக் கொண்டுவிட்டார். திருத்தூதர் அமைதியுடன் பேசினார்கள். ''இது பள்ளி. இறைவணக்கத்திற்காகவும் திருக்குர்ஆன் ஓதுவதற்காகவும் இது எழுப்பப்பட்டிருக்கிறது. இத்தகைய இடங்களை மலஜல உபாதைகளுக்குப் பயன்படுத்துவது சரியல்ல தெரிகிறதா? இனிமேல் இப்படியெல்லாம் செய்யக் கூடாது.!''

ஃ ஃ ஃ

திருத்தூதரிடம் ஓர் உதவி கோரினார் ஒருவர். திருத்தூதரவர்கள் அந்த உதவியைச் செய்துவிட்டுச் சொன்னார்கள்: ''உமக்கு இந்த உதவியைச் செய்வதில் நான் மகிழ்ச்சி யடைகிறேன்,''

அந்த மனிதர் மறுப்புணர்ச்சியுடன் தலையசைத்தார். ''இது ஓர் உதவியா? அற்ப உதவி★ இதை உதவி என்று குறிப்பிடவே முடியாதே. குறிப்பிடத்தக்க எந்த உதவியையும் தாங்கள் எனக்குச் செய்து விடவில்லை.

நண்பர்கள் துணுக்குற்றார்கள்; விரைவாக எழுந்து நின்றார்கள். விபரீதம் ஏற்படவிருந்தது. பெருமானார் விபரீதத்தைத் தடுத்தார்கள். எல்லோரையும் கையமர்த்தி அமைதியுடன் இருக்கச் சொன்னார்கள்.

அவர் போய்விட்டார்; அண்ணலவர்கள் வீட்டிற்குச் சென்று, மேற்கொண்டு சிறிது உதவி செய்தார்கள். அவர் முகம் மலர்ந்தது. அதில் மகிழ்ச்சியின் முத்திரை பளிச்சென்று தெரிந்தது. ''...இறைவன் தங்களுக்கு நற்கூலியளிப்பானாக! குடும்பத்தில் நன்மையை வளரச் செய்வானாக! இந்த உதவியை நான் இப்போது மனப்பூர்வமாக வரவேற்கிறேன்: சற்று முன் பதற்றத்தினால் நான் கூறியதை மன்னித்துக் கொள்ளுங்கள்!''

பெருமானாரின் முகத்தில் புன்னகை நெளிந்தது, ''சற்று முன் நீர் கூறியது வேறு; இப்போது நீர் கூறுவது வேறு; உம்மீது எனக்கு வெறுப்பில்லை, நிறைந்த அன்பு உண்டு. எல்லோருடைய அன்பையும் நீர் பெற வேண்டுமல்லவா?'

அந்த மனிதர் கூர்ந்து கவனித்தார்.

''என் நண்பர்களின் மனத்தில் உம்மைப் பற்றிய தவறான அபிப்பிராயம் உருவாகிவிட்டது. சற்றுமுன் நீர்தான் பார்த்தீரே. அவர்கள் உம்மீது எப்படிப் பாய்ந்தார்கள் என்று தான் உமக்குத் தெரியுமே. ஒன்று சொல்கிறேன். நீர் விரும்பினால் அப்படிச் செய்யும். நான் வற்புறுத்தத் தயாராயில்லை. நாளைக்கு நீர் என்னிடம் வாரும். அப்போது என் நண்பர்களும் அங்கு இருப்பார்கள். இப்போது என்னிடம் சொன்ன வார்த்தைகளை நீர் அவர்களுக்கு முன்னால் சொல்லவேண்டும். இப்படி நீர் செய்தால் உம்மீது அவர்களுக்கு ஏற்பட்டிருக்கும் வெறுப்பு நீங்கிப் போய்விடும்.''

பொழுது விடிந்தது. பெருமானாரின் திருச்சபை கூடியது. குறிப்பிட்ட நேரத்தில் அந்த மனிதர் வந்துவிட்டார்.

பெருமானார் பேசினார்கள்: ''இவர் நேற்று வெறுப்படைந்து போனது உங்களுக்குத் தெரியும், எந்தத் தனிமனிதனுடைய வெறுப்பையும் நாம் சம்பாதித்துக் கொள்ளக்கூடாது. பிறகு, இவருக்கு மேற்கொண்டு சிறிது உதவி செய்து இவர் திருப்தியைப் பெற்றேன்...ஏன் பேசாமலிருக்கிறீர்? நான் சொல்வது சரிதானே?''

அவர் ஆமோதித்தார்; பெருமானாரைப் பாராட்டினார். இதனால், இழந்த நட்பை அவர் மீண்டும் பெற்றார். மக்களிடையே நல்லுறவைத் தழைக்கச் செய்ய அவர்கள் செய்த முயற்சி எத்துணை சிறப்பு வாய்ந்தது!

''இவரைப் பற்றி எண்ணிப் பார்க்கும் போது என் மனத்தில் ஓர் உவமானம் உருவாகிறது'' என்று பெருமானார் மீண்டும் பேச ஆரம்பித்தார்கள். ''ஒரு மனிதன் ஒட்டகம் ஒன்றை வளர்த்து வந்தான். ஒரு நாள் அது கட்டை அறுத்துக் கொண்டு ஓடியது. அவன் துரத்திப் பிடிக்க முனைந்தான். முயற்சி பலிக்கவில்லை. அவர்கள் துரத்தத் துரத்த அது மேலும் மேலும் வேக மெடுத்தது. பிறகு, அந்த மனிதன் எல்லோரையும் போகச் சொல்லிவிட்டு, அவன் மட்டும் தனியாகக் காரியத்தில் இறங்கினான். தன் ஒட்டகத்தை எப்படித் திருத்த வேண்டும் என்று அவனுக்குத் தெரியாதா? மெது மெதுவாக ஒட்டகத்தை வழிக்குக் கொண்டுவந்தான். திருப்தியடைந்த ஒட்டகம் அச்சமின்றி அவனுடன் வந்துவிட்டது. இப்படித்தான் இவரை நான் வழிக்குக் கொண்டு வந்தேன். நேற்று நீங்கள் துடித்தீர்கள். நான் உங்களுக்கு அனுமதி கொடுத்திருந்தால் இவரைக் கொன்று போட்டிருப்பீர்கள். உங்களைக் கண்டு இவர் மிரண்டார்; நீங்கள் மிரட்டினீர்கள். கடைசியில் நான் மட்டும் தனியாகச் சென்று இவரை வழிக்குக் கொண்டு வந்தேன்!''

ஃ ஃ ஃ

# 9. தயாளம்

எல்லோரையும்விட அதிகமாகப் பெருமானார் தயாள சிந்தை பெற்றிருந்தார்கள். அவர்களைத் தயாளத்தின் குன்று என்றால் மிகையாகாது. எல்லோரையும் முந்திக் கொண்டு, எல்லோரையும்விட அதிகமாக அவர்கள் தர்மம் செய்நார்கள். குறிப்பாக ரமலான் மாதத்தில் அவர்கள் தங்கு தடையின்றி வாரி இறைத்தார்கள். சுயநலத்தை எண்ணியும் பாராமல் மக்களுக்காகவே வாழ்ந்தார்கள். மக்களின் நலத்தையே தம் நலம் என்று கருதினார்கள். மக்களின் வாழ்க்கைத் தரத்தை உயர்த்துவதற்காக மக்களுக்காக அனுப்பப்பட்ட ஒளி விளக்கல்லவா அவர்கள்!

அறிஞர் அலீ, பெருமானாரை இப்படி வர்ணித்தார்கள்; ''பெருமானார் மக்கள் அனைவரையும்விடத் தர்ம சாலியாக இருந்தார்கள். எல்லோருக்கும் அவர்கள் வாரி வழங்கினார்கள். அவர்களின் திருக்கரம் தங்கு தடையில்லாமல் தானம் செய்தது. அவர்களுக்குப் பரந்த மனப்பான்மை இருந்தது. மற்றவர்கள் எல்லோரையும்விட அவர்கள் பரந்த நோக்கம் கொண்டிருந்தார்கள். குறுகிய மனப்பான்மை அவர்களிடம் கிடையாது. உண்மையுரைப்பது அவர்களின் சிறப்பம்சங்களில் ஒன்று. எல்லோரையும்விட அவர்கள் துணிந்து உண்மையுரைத்தார்கள். மற்ற எவரும் அவ்வளவு துணிவுடன் உண்மை பேச முடியாது. தம் பொறுப்பில் அவர்கள் குறை வைப்பதில்லை. காரியங்களை பொறுப்புணர்ச்சியோடு செய்து முடிப்பார்கள். மென்மையான மனம் அவர்களுக்கு இருந்தது. யாரையும் கடிந்துரைக்கமாட்டார்கள். எல்லோரிடமும் அன்பாகப் பழகுவார்கள். அவர்கள் குடும்பத்தாருக்கு மத்தியில் சிறப்புடன் விளங்கினார்கள்.''

பெருமானாரின் சிறப்பு வரம்பற்றது. அவர்களைப் பொது நோக்கோடு பார்ப்பவன் ஆச்சரியப்படுவான். பொதுவாக

அவர்கள் விந்தை மனிதராகவே காட்சியளித்தார்கள். உண்மையை அறிந்து கொண்டவன் அவர்களை அவசியம் விரும்புவான். மனிதனின் நட்பை ஈர்க்கும் மனப்பண்புகள் பெருமானாரிடம் நிறைந்து கிடந்தன. நடுநிலையில் நின்று ஆராயும் எந்த மனிதனாலும் அவர்களை விரும்பாமலிருக்க முடியாது. ஒரு மனிதன் அவர்களை நன்கு அறிந்து கொண்டு விட்டால், ''அவர்களைப் போன்ற ஒரு மேதையை இது வரையில் நான் கண்டதில்லை. இனிமேல் இப்படி ஒரு மேதாவி தோன்றுவார் என்றும் என்னால் நம்ப முடியவில்லை'' என்றுதான் கூறுவான்.

யார் வந்து எது கேட்டாலும் அவர்கள் கொடுத்துதவினார்கள். பெரும்பாலும் யாருக்கும் அவர்கள் கைவிரிக்க மாட்டார்கள். ஒரு நாள் யாரோ ஒருவர் எதிரில் வந்துநின்றார். பெருமானாரிடம் சிறிது உதவி கோரினார். பெருமானார் பெரிய அளவில் உதவியளித்தார்கள். அத்துணை பெரிய தாராளமான உதவியை அவர் எதிர்பார்க்கவில்லை. அந்த மனிதர் கட்டு மீறிய உற்சாகத்துடன் தம் நண்பர்களிடம் சென்றார்; தெரிந்தவர்களைப் போய்க் கண்டார்; இனபந்துக்களுக்குப் போதித்தார்: ''நண்பர்களே! நீங்கள் இன்னும் முரண் வழியில் சென்று கொண்டிருப்பது சரியல்ல. இன்றே, இப்போதே முஸ்லிம்களாகிவிடுங்கள், முஹம்மது பெரியதொரு கொடைவள்ளல். அவர் எனக்குப் பெரியதொரு உதவியை அளித்துவிட்டார். அத்தகைய உதவி கிடைக்கும் என்று நான் எண்ணிப் பார்க்கவேயில்லை. அவர் வறுமைக்கு அஞ்சுவதேயில்லைபோலும். இல்லாவிட்டால் இப்படி தர்மம் செய்வாரா? இருப்பதை எல்லாம் வாரி வாரித் தர்மம் செய்து விடுகிறார்.''

பெருமானாரிடம் உதவி கோரப்பட்ட எந்தச் சமயத்திலும் அவர்கள், ''இல்லை'' என்று பதிலளிக்கவேயில்லை. ஒரு சமயம் அண்ணலார் 90,000 வெள்ளி நாணயங்களை ஒரு பாயில் கொட்டிக் குவித்தார்கள். சிறிது நேரத்திற்கெல்லாம் அந்த நாணயக் குவியல் முழுவதும் பங்கிடப்பட்டு எல்லோருக்கும்

அளிக்கப்பட்டது. கேட்டோருக்குத் தயங்காமல் வாரி வழங்கப் பட்டது. இந்தத் தர்மப் பணி சிறிது நேரத்தில் ஒருவாறு முடிந்தது. பாயில் குவிந்திருந்த நாணயங்கள் மாயமாக மறைந் துவிட்டன.

அப்போது ஒருவர் வந்தார். பெருமானாருக்கு எதிரில் வந்து நின்று உதவி கோரினார். இந்தக் கட்டத்தில் பெருமானார வர்கள் வெறும் கையோடு அமர்ந்திருந்தார்கள். தர்மம் செய்வ தற்கு அவர்களிடம் எதுவும் மிஞ்சியிருக்கவில்லை. எல்லாவற் றையும் தான் அவர்கள் ஏழைகளுக்கு அளித்து விட்டார்களே.

''உமக்கு உதவி செய்ய இப்போது என்னிடம் ஒன்றுமில் லையே!''

இவ்வாறு பதிலளித்த பெருமானார் தம் பொறுப்பு தீர்ந் தது என்று பேசாமலிருந்து விடவில்லை. ''இருந்தாலும் சற்றுப் பொறும், எங்களுக்கென்று ஏதேனும் வந்தால் தருகிறோம்!'' என்றார்கள்.

உமர் குறுக்கிட்டுப் பேசினார். பெருமானாரின் விடை உமருக்குப் பிடிக்கவில்லை. ''திருத்தூதர் அவர்களே? இது என்ன? இவ்வாறு சிரமப்படவேண்டிய தேவையில்லையே. இது உங்களுக்குக் கடமையல்ல. இறைவன் இதை உங்களுக்கு விதிக்கவில்லை. இருக்கும்போது கொடுக்க வேண்டியதுதான். ஆனால் இப்போது நம்மிடம் ஒன்றுமில்லையே இல்லாத போது சிரமமெடுக்கவேண்டிய தேவை என்ன? உங்களால் செய்யமுடியாத காரியத்தில் தலையிட்டுச் சிரமப்படவேண் டும் என்று இறைவன் கட்டளையிடவில்லையே.''

பெருமானார் முகத்தைச் சுளித்தார்கள். நண்பரின் கருத்தை அவர்கள் வரவேற்கவில்லை. தன்னுயிரைவிட மன்னுயிரை மேலாக மதிப்பவர்களல்லவா? இதனால் தானே இறைவன் அவர்களைப் பாராட்டினான், ''நீர் சிறந்த குணசீலர்'' என்று.

இந்தக் கட்டத்தில் உதவி கோரிய அந்த மனிதர் குறுக்கிட் டுப் பேசினார். ''தாராளமாகத் தர்மம் செய்யுங்கள்! அதிகார

வர்க்கத்துக்கு நீங்கள் பயப்பட வேண்டியதில்லை'' என்றார் பொருட் செறிவுடன்.

இதைக் கேட்டதும் பெருமானார் சிரித்து விட்டார்கள். அந்தச் சிரிப்பில்தான் எத்தனை அர்த்தம்! அளந்து சிரிக்கும் அண்ணலாயிற்றே அவர்கள்.

பெருமானாரின் முகம் தெளிவாக இருந்தது என்று ஆரம் பத்திலேயே நான் குறிப்பிட்டேன். அவர்களுக்கு மகிழ்ச்சி ஏற்பட்டால், அந்த மகிழ்ச்சி அவர்களின் முகத்தில் மிகத் தெளிவாகப் பிரதிபலிக்கும்.

பெருமானார் ஹுனைன் யுத்தத்திலிருந்து திரும்பி வந்து கொண்டிருந்தார்கள். கிராமவாசிகள் சிலர் எதிர்ப்பட்டனர். பெருமானாரை ஒரு மரத்தடிக்கு அழைத்துச் சென்றனர். எல் லோருமாகச் சேர்ந்து கொண்டு பெருமானாரின் மேலாடை யைப் பிடுங்கிக் கொண்டு விட்டார்கள். இது அன்பு மிகுதியால் ஏற்பட்டதாகவும் இருக்கலாம். விரோதத்தின் பிரதிபலிப்பாக வும் இருக்கலாம். அவர்கள் கிராமவாசிகள். இங்கிதமின்றி எதையும் செய்துவிடுவார்கள்.

திருத்தூதர் எழுந்து நின்றார்கள். ''அதை என்னிடம் கொடுத்து விடுங்கள்! அது ஒன்றுதான் என்னிடம் இருக்கிறது. என்னிடம் அதிகமாக இருந்தால் உங்களுக்கெல்லாம் நானே பங்கு போட்டுக் கொடுத்து விடுவேனே, நீங்கள் பறிக்க வேண்டியதேயில்லை. நான் கஞ்சனோ பொய்யனோ அல்ல என்பதை நீங்கள் உணர வேண்டும். என்னைக் கோழை என்றும் எண்ணிவிடாதீர்கள்! நான் தர்மம் செய்யத் தயங்குவ தில்லை.''

⁂ ⁂ ⁂

# 10. வள்ளலின் வீரம்

பிறருக்கு உதவும் மனப்பான்மை ஒருபுறமிருக்க, பெருமானாரிடம் வீர உணர்ச்சி அபரிமிதமாகக் காணப்பட்டது. எல்லோரையும்விட அவர்கள் தைரியசாலியாயிருந்தார்கள். குருட்டுத் தைரியமல்ல. இடம் பார்த்துச் செயலாற்றும் அரிய ஆற்றல் அவர்களுக்கு இருந்தது.

அறிஞர் அலீ வர்ணிக்கிறார்: ''நான் கண்கூடாகக் கண்டேன், பெருமானாரின் வீரத்தை. பத்ர் யுத்தத்தில் நாங்கள் எல்லோரும் கலந்து கொண்டோம். பெருமானாரும் கலந்து கொண்டார்கள், எங்கள் எல்லோரையும்விட அவர்கள் தான் விரோதிகளை அடுத்திருந்தார்கள். அப்போது அவர்கள் வீர உணர்வால் துடித்துக் கொண்டிருந்தார்கள். படையோடு படை மோதும்போது பெருமானார் குறித்துத்தான் நாங்கள் கவலைப் படுவோம். அவர்களைப்போல் வேறு யாராலும் விரோதிகளை அத்துணை அணுக முடியாது.''

பெருமானார் அதிகமாக உரையாடுவதில்லை. மனக்கிலேசத்தை அவர்கள் வார்த்தைகளாகக் கொட்டிவிடுவதில்லை. விரோதிகளை நிந்தித்துப் பேசமாட்டார்கள். யுத்தத்திற்கு புறப்படுமாறு மக்களுக்குக் கட்டளையிடும்போதே அதற்கு அவர்கள் தயாராகிவிடுவார்கள். அவர்கள் எதிர்ச் சைனியத்தை அணுகி நின்றதில் வியப்பில்லை. எதிரிகளைத் துரிதமாக அணுகுபவன் தானே உண்மையான வீரன்.

இப்ரான் ıபின் ஹஸீன் இப்படிக் கூறுகிறார்: ''பெருமானார் போர் முனைக்குச் சென்றால், அவர்களது அடிதான் முதலடியாக இருக்கும். அவர்கள் தான் எதிரிகளுக்கு முன்பே வாளை வீசுவார்கள்.'' - தேவையான அளவிற்கு அவர்கள் பலசாலியாகவும் இருந்தார்கள்.

ஒரு சமயம் பெருமானாரை விரோதிகள் சூழ்ந்து கொண்டு விட்டார்கள். அவர்கள் கலங்கவில்லை. கழுதையை விட்டுக் கீழே இறங்கினார்கள்.

''நான் இறைவனின் தூதன். இதில் எவ்வித புரட்டும் கிடையாது.'' - இக்கட்டான சந்தர்ப்பத்தில் அவர்களின் துணிச்சல்தான் என்னே!

# 11. அண்ணலாரின் அடக்கம்

பெருமானாருக்குச் சமுதாயத்தில் நிறைந்த மதிப்பு இருந்தது. உயர்ந்த அந்தஸ்துக்கு அவர்கள் உரியவர்கள். என்றாலும் மிகுந்த அடக்கத்தோடு அவர்கள் நடந்து கொண்டார்கள். கால்நடைகளின் மீது அவர்களுக்கு அன்பு இருந்தது. ஒட்டகத்தை விரட்டுவதற்காக அவர்கள் கல்லெறிவார்கள். ஆனால் ஒட்டகத்தை அடித்துவிட மாட்டார்கள்.

சிறுவர்களுக்கு மத்தியில் பெருமானார் நடந்து செல்வார்கள். சிறுவர்களுக்கு அவர்கள் சலாம் சொல்லுவார்கள்.

ஒரு சமயம் பெருமானார் ஒரு மனிதனை அணுகினார்கள், அந்த மனிதன் பெருமானாரைக்கண்டு நடுங்கினான். அச்சத்தினால் அவன் முகம் வெளிறிப்போய்விட்டது.

''ஏனப்பா பயப்படுகிறாய்?'' என்று பெருமானார் கேட்டார்கள், ''என்னை ஓர் அரசன் என்று எண்ணிவிட்டாயா என்ன? நான் அரசனல்ல; காய்ந்த ரொட்டி சாப்பிடக்கூடிய ஒரு குறைஷிப் பெண்ணின் மகன்தானே.''

நண்பர்களோடு பெருமானார் கலந்து உட்கார்ந்திருப்பார்கள். தமக்கென்று தனிப்பட்ட இடம் வேண்டும் என்ற எண்ணமே அவர்களுக்குக் கிடையாது. பெருமானாரின் திருச்சபைக்குப் புது மனிதர் யாரேனும் வந்துவிட்டால் அவரால் பெருமானாரை இலக்குக்கண்டு பிடிக்கவே முடியாது. அவர்கள் தான் கூட்டத்தில் கலந்துவிடுகிறார்களே. வருகிறவர்களுக்கு இதனால் சிரமம் ஏற்பட்டது.

இதை எல்லாம் பெருமானாரின் நண்பர்கள் பார்த்தார்கள்; புதிதாக வருபவர்கள் சங்கடப்படுவதைக் கண்டார்கள். எனவே புதிதாக வருபவர்கள் பெருமானாரைச் சிரமமில்லாமல் கண்டு கொள்வதற்கு வசதியாகத் தனியிடம் ஒன்றை ஏற்பாடு செய்தார்கள். சிறியதொரு மண்மேடை எழுப்பினார்கள். இந்த ஏற்பாட்

டிற்குப் பிறகு பெருமானார் அந்த மண் மேடையில் அமரத் தொடங்கினார்கள். ஆனால் பெருமானார் இப்படித் தனக்கு ஒரு மேடை அவசியம் என்று குறிப்பிடவே இல்லை. அது நண்பர்களின் முயற்சி.

''ஏன், சாய்ந்து கொள்ளுங்களேன்!'' என்று அன்னை ஆயிஷா கூறினார் ஒரு சமயம்.

பெருமானார் நேர் எதிராகச் செயலாற்றினர். தலையைத் தரைக்கு அருகில் சாய்த்தார்கள், ''இல்லை, அது எனக்குத் தகுதியில்லை. நான் இறைவனின் அடிமை. எனவே அடிமை எப்படி உட்காரவேண்டுமோ அப்படித்தான் நான் உட்காருகி றேன்.''

பெருமானாரை யாரேனும் அழைத்தால், ''இதோ தயாரா யிருக்கிறேன்'' என்பார்கள். எத்துணை அடக்கம்!

விலையுயர்ந்த பாத்திரத்தில் அவர்கள் சாப்பிடுவதில்லை.

நண்பர்களின் பேச்சுக்குத் தகுந்தபடியே பெருமானார் பேசினார்கள். மறுமை சம்பந்தமாகப் பேச்செடுத்தால் பெரு மானாரும் கலந்து கொள்வார்கள். உணவு, உடை சம்பந்தமா கப் பேச்சுத் திரும்பினால் அதிலும் கலந்து கொள்வார்கள். பேச்சின் திருப்பங்களுக்குத் தக்கவாறு அவர்கள் பேசுவார்கள். இதனால் நண்பர்களிடையே பரிவும் பாசமும் பன்மடங்காயின.

சில வேளைகளில் பெருமானாருக்கு எதிரில் நண்பர்கள் பாட்டுப் பாடுவார்கள். முற்கால அரசு மக்களின் மூடப்பழக்க வழக்கங்களை எடுத்துக் கூறிச் சிரிப்பார்கள். நண்பர்கள் சிரிக் கும் போதெல்லாம் பெருமானார் புன்முறுவல் பூப்பார்கள்.

நண்பர்களைப் பெருமானார் அடக்கியாள்வதில்லை. மட் டம் தட்டுவதும் அவர்களுக்குப் பிடிக்காது. ஆனால் சட்டத் திற்கு முரணான காரியம் நிகழ்வதாயிருந்தால், தம் சக்தி முழுவதையும் பிரயோகித்துத் தடுப்பார்கள்.

# 12. உள்ளும் புறமும்

பெருமானார் நெட்டையுமல்ல, குட்டையுமல்ல. நடுத்தரமான உயரத்தை அவர்கள் பெற்றிருந்தார்கள். தனியாக நடந்து செல்லும்போது அப்படித்தான் தோற்றமளிப்பார்கள். ஆனால் நெட்டையான ஒருவரோடு நடந்து சென்றால், அவரைவிடப் பெருமானார் நெட்டையாக இருப்பார்கள். தனியாக நிறுத்தி வைத்துப் பார்த்தால், யாரும் அவர்களை நெட்டை என்று சொல்ல முடியாது. அவர்களது அவயவங்கள் அத்துணை பொருத்தமாக அமைந்திருந்தன.

சில சமயங்களில் உயரமான இருவருடன் அவர்கள் சேர்ந்து செல்வதுண்டு, இந்தக் கட்டத்திலும் பெருமானாரே உயரமாக இருப்பார்கள். ஆனால் இங்கு ஒரு விஷயம் கவனிக்க வேண்டும்: அவ்விருவரும் நெட்டையர்கள் என்று கருதப்படுகிறார்கள். அவ்விருவரையும் மக்கள் அப்படித்தான் கணிக்கிறார்கள். ஆனால் பெருமானாரை யாரும் நெட்டையர் என்று எண்ணுவதில்லை; சொல்வதுமில்லை. சீரான அங்க அமைப்பே இதற்கு முக்கியமான காரணம்.

''நடுநிலையில் தான் நன்மை இருக்கிறது'' என்று அவர்களே கூறினார்கள்.

நபியின் நிறம்: அவர்கள் பிரகாசமான நிறத்தைப் பெற்றிருந்தார்கள். மஞ்சள், சிவப்பு முதலான எந்த நிறமும் கலக்காத தூய்மையான வெண்மை நிறம் அவர்களுடையது.

பெருமானாரின் பெரிய தந்தை அபூதாலிப் இப்படி வர்ணிக்கிறார்: ''வெண்முகில் அவரிடமிருந்துதான் வெண்மையைப் பெறுகிறது.''

''சிவப்பான நிறம் பெற்றிருந்தார்கள்'' என்பது வேறு சிலரது கருத்து. இந்தக் கருத்தில் தவறில்லை பெருமானாரின்

உடலில் சூரிய ஒளிக்கும் காற்றோட்டத்திற்கும் இலக்கான பகுதிகள் அப்படித்தான் இருந்தன. அந்தப் பகுதிகளில் வெண்மையோடு இலேசான சிவப்பும் கலந்திருந்தது. துணிக்கு அடியிலுள்ள பகுதிகள் தூய்மையான வெண்மையோடு திகழ்ந்தன.

அவர்களின் முகத்தில் முத்து முத்தாக வியர்வைத் துளிகள் பளபளக்கும். அந்த வியர்வையில் துர்நாற்றம் கிடையாது.

ரோமம் முளைத்த பகுதிகள்: பெருமானாரின் தலை முடி அவர்களுக்குத் தனிப்பட்ட அழகைக் கொடுத்தது. அவர்களின் முடி, பெண்களுக்கு இருப்பதுபோல் அவ்வளவு நீளமுமல்ல; மிகக் குறைவாகவும் இல்லை. தேவையின் அளவிற்கு அவர்கள் முடியை வளர்த்திருந்தார்கள். முடியை வாரிவிட்டால் அது புஜத்தைத் தொட்டு நிற்கும்.

''அவர்களின் முடி காதுவரை இருந்தது'' என்று அநேகர் குறிப்பிடுகிறார்கள். இப்படியும் சில சந்தர்ப்பங்களில் இருந்திருக்கலாம். பெரும்பாலான நபித் தோழர்கள் இந்தக் கருத்தைத் தான் ஏற்கிறார்கள்.

சில சமயங்களில் முடியை நான்கு பாகங்களாகப் பிரித்து இரண்டு பக்கங்களிலும் தொங்க விட்டுக்கொள்வார்கள். வலச் செவிக்கு இரு புறமும் முடியின் இரண்டு பிரிவுகள் தொங்க, இடச் செவிக்கு இருபுறமும் மற்ற இரண்டு பிரிவுகள் தொங்கின. காதுகள், முடிப்பிரிவுகளுக்கு மத்தியில் பளிச்சென்று தோற்றமளிக்கும்.

அவர்களின் தலையிலும் தாடியிலுமாக 17 நரை முடிகள் இருந்தன. அவ்வளவுதான். இதற்கு அதிகமாக நரை கிடையாது.

பெருமானார் வசீகரமான முகத்தோற்றத்தைப் பெற்றிருந்தார்கள். அந்த முகம் ஒளியைக் கக்கிக்கொண்டிருந்தது. அந்த முகத்தை வர்ணிப்பவர்களெல்லாம் முழு மதியைத்தான் அதற்கு ஒப்பிட்டார்கள். பெருமானாரின் நெற்றி அகலமாக இருந்தது; புருவங்கள் நீளமாக இருந்தன. இரண்டு புருவங்க

ளுக்கு மத்தியில் அவர்களின் மேனி வெள்ளித் துண்டைப் போல் பிரகாசித்தது.

ஒளிவிடும் கண்களில் இலேசான செம்மை படர்ந்திருந்தது. அடிக்கடி அவர்கள் கண்களை இமைப்பார்கள். செவ்வையான அழகான மூக்கு கவர்ச்சியை அளித்தது. அவர்கள் சிரித்தால் மின்னல் வெட்டுவது போலிருக்கும். அத்துணை பிரகாசமாக இருந்தன அவர்களின் பற்கள்.

அவர்களின் உதடுகள் அழகுடன் அமைந்திருந்தன. வாய் மூடி இருக்கும்போது அவை இன்னும் எடுப்பாக இருக்கும். அவர்களின் முகம் நீளமானதல்ல. அந்த முகத்தில் அதிகமான சதைப் பற்றும் கிடையாது. அவர்கள் தாடியை வளர்த்தார்கள்; மீசையைக் குறைத்தார்கள்.

பெருமானாரின் கழுத்து அழகுக்குப் பிரதிபிம்பம், அதனை நெட்டை என்றும் சொல்லமுடியாது குட்டை என்றும் கூற முடியாது. அந்தக் கழுத்தில் சூரிய ஒளிக்கும் காற்றோட்டத்திற்கும் இலக்காகாத பகுதி வெள்ளிப்போல் பிரகாசித்தது.

அகன்ற நெஞ்சு அவர்களுக்கு இருந்தது. அவர்களது நெஞ்சிலோ வயிற்றிலோ ரோமம் கிடையாது.

உறுதியான தோள்கள் அவர்களுக்கு அமைந்திருந்தன. முதுகும் அகலமாகவே இருந்தது. முதுகில்தான் அவர்களுக்கு நபித்துவத்தின் முத்திரை, அடையாளம் இருந்தது. முதுகில் வலப்புயத்திற்கு அருகில் கறுப்பு மச்சம் ஒன்று இருந்தது. சுத்தமான கறுப்பல்ல. மஞ்சள் கலந்த கறுப்பு. அந்த மச்சத்தைச் சுற்றிலும் சில ரோமங்கள் வரிசையாக முளைத்திருந்தன. இந்த மச்சத்தைத்தான் நபித்துவத்தின் அடையாளம் என்று அறிஞர்கள் குறிப்பிடுகிறார்கள்.

வெள்ளிபோல் அவர்களின் விரல்கள் பிரகாசமாகக் காட்சியளித்தன. அவர்களின் உடல் முழுவதும் நறுமணம் கமழ்ந்தது. அவர்களுடன் யாரேனும் கை குலுக்கினால் அன்று முழுவதும் அந்தக் கையில் மணம் வீசும். சிறுவர்களின் தலையைப் பெருமானார் அன்போடு வருடுவார்கள். ஒரு சிறுவனின்

தலையை அவர்கள் வருடிவிட்டால் எத்துணை பெரிய கூட்ட மானாலும் அவனைக் கண்டுபிடித்துவிடலாம். அவன் தலை அத்துணை மணமாக இருக்குமாம்.

நிறையிலும் பெருமானார் நடுத்தரமாகத்தான் இருந்தார் கள்.

நபியின் நடை: அண்ணலவர்கள் அடக்க ஒடுக்கத்தோடு வீதியில் நடந்து செல்வார்கள். அந்த நடையில் மமதை, கர்வம் தற்பெருமை எதுவும் இருக்காது. அகலமாக அடிவைத்து நடக்கமாட்டார்கள்; அவர்கள் நடந்து செல்லும் போது இரண்டு கால்களுக்குமிடையில் குறுகிய இடைவெளியே இருக்கும்.

''நபி ஆதம் (அலை) அவர்களைப் போலவே நான் நடந்து கொள்கிறேன். இப்ராஹீம் நபியவர்கள் தோற்றத்திலும் குணத் திலும் என்னையே ஒத்திருந்தார்கள்!'' என்று அவர்கள் கூறினார் கள்.

அடியிற் கண்டவாறு அவர்கள் கூறிக்கொண்டிருப்பார்கள்; ''வல்ல நாயன் எனக்குப் பத்துப் பெயர்களை இயற்றினான்; முஹம்மது, அஹ்மது; மாஹீ-அழிப்பவர், முரண்வழி முறையை என்மூலம் இறைவன் அழிக்கிறான், ஆகிப்- கடைசி யானவர், அதாவது எனக்குப் பிறகு திருத்தூதர் கிடையாது. எழுப்புபவர், அதாவது என் காலடியில் தான் மக்கள் மறுமை யில் எழுப்பப்படுவார்கள்-நான் அன்புத் தூதர்; மன்னிப்புத் தூதர்; சமாதானத்தூதர்; பின்பற்றப்படுபவர்-அதாவது என்னை மக்கள் பின்பற்றி நடக்கிறார்கள். பூரண மனிதன் நான்-இப்படி எல்லாம் இறைவன் எனக்குப் பெயரிட்டான்.

இறைவனே எல்லாம் அறிந்தவன்.

❖ ❖ ❖

# அண்ணலார் நிகழ்த்திய அற்புதங்கள்

பெருமானார் உண்மையான திருத்தூதர்தான் என்பதற்கு அவர்களின் வாழ்க்கையிலேயே எத்தனையோ ஆதாரங்கள் இருக்கின்றன. அவர்களின் சொல், செயல், பண்பு, பழக்க வழக்கம், சிந்தனை, அன்பு மனப்பான்மை இவை அனைத்தும் அவர்களின் நபித்துவத்திற்குச் சரியான ஆதாரங்கள். மக்கள் மீது அவர்கள் அன்பு செலுத்தினார்கள்; நேர்வழியின் பக்கம் அவர்களை அழைத்தார்கள். சிக்கலான பிரச்சினை எழும் போது எத்தனை சாதுரியமாக விடை கொடுத்தார்கள்!

இவை அனைத்தும் நம் சிந்தனைக்குக் கட்டுப்படாத விஷயங்கள். அறிஞர்களும் சட்டமேதைகளும் அவற்றை ஆராய்ந்தார்கள். கடைசியில் அவர்கள் ஒரு முடிவுக்கு வந்தார்கள். ''நபித்துவம் என்பது ஒரு மனிதனின் முயற்சியால் பெறமுடியாத ஒன்று. இறைவனாகவே அதனைச் சிலருக்கு அளிக்கிறான்.''

முயற்சி என்பது சிறப்பு வாய்ந்த ஒன்றுதான். ஆனால் சொந்த முயற்சியால் ஒரு மனிதன் திருத்தூதராவது சாத்தியமில்லை. தெய்வீக உதவி அவனுக்கு மிகவும் அவசியம். இறைச் சக்தியின் ஒத்தாசையின்றி எவரும் திருத்தூதரானதில்லை.

பெருமானாரிடம் இடம் பெற்றிருந்த அருங்குணங்கள் ஏராளம். புரட்டுச் செய்யும் ஒருவனுக்கு அவை இருப்பது சாத்தியமேயில்லை. 'நான் இறைதூதர்' என்ற பெருமானாரின் வார்த்தைகளில் பொய் இருப்பதற்கு நியாயமேயில்லை. பண்பின் சிகரமாகிய அவர்கள் எதற்காகப் பொய்யுரைக்க வேண்டும்? சுயநலமற்ற அந்த அண்ணல் எதற்காகச் சுயநலமிகளின்

வழியில் நடை போடவேண்டும்? எப்படி நடை போட்டிருக்க முடியும்? இதை எப்படித்தான் நம்ப முடியும்?

அவர்கள் உண்மையான திருத்தூதர் என்பதற்கு வேறு எந்த ஆதாரமும் தேவையில்லை. அவர்களின் குணங்களும் செயல்களுமே போதிய ஆதாரங்கள், அவற்றை ஊன்றிப் பார்ப்பவர்கள்-அவர்களின் தூதுத்துவத்தை மறுக்கமாட்டார்கள்.

அண்ணலாரின் முகத்தை ஒருவன் பார்த்து விட்டால், ''இறைவன் மீது ஆணையிட்டுக் கூறுவேன். இது பொய்யனின் முகமல்ல. பொய்யனின் முகம் இத்துணை பிரகாசமாக இருக்காது'' என்றே கூறுவான்.

பெருமானாரின் அந்தஸ்தை நீங்கள் உணர வேண்டும் என்பதற்காகவே அவர்களின் நற்பண்புகளை எழுதினேன். எல்லாச் சிறப்புகளையும் அவர்களுக்கு இறைவன் தான் கொடுத்தான். இதற்காகப் பெருமானார் முயற்சி எடுத்துத் தேடி அலையவில்லை. அவர்கள் எந்த நூலையும் படிக்கவில்லை. அறிவைத் தேடி எந்த நாட்டுக்கும் அவர்கள் பிரயாணப்படவில்லை. அரேபிய மக்களுக்கு மத்தியில், மூடர்களுக்கிடையில் அநாதையாக அவர்கள் வளர்ந்தார்கள்.

நிலைமை இப்படி இருக்க, அவர்கள் எவ்வாறு குணசீலரானார்கள்? எப்படி அரிய சாதனை புரிந்தார்கள்? இப்படி முன்னேறும் ஆற்றல் எல்லோரிடமும் உண்டு என்று நம்ப முடியுமா? கசப்பான சூழ்நிலையில் வளர்ந்த அவர்கள் இனிக்க இனிக்கப் பேசினார்களே அது எப்படி? சூழ்நிலையை ஒட்டியே மனிதன் வளர்கிறான்; அவன் பண்பு வளர்கிறது. ஆனால் அந்த அற்புத மனிதர் சூழ்நிலையையே திருத்தியமைத்து விட்டார்கள்.

பெருமானாரின் பண்புகளையும் செயல்களையும் நடுநிலையில் நின்று ஆராய்ந்தாலே போதும், ''முகம்மது (ஸல்) உண்மையான திருத்தூதர்'' என்ற விடை கிடைத்துவிடும். அடிக்கடி அருளப்பட்டு வந்த இறைச் செய்திதான் பெருமானாருக்கு எல்லாவற்றையும் கற்றுக் கொடுத்தது.

அவர்களிடம் பொங்கி வழிந்த சிறப்பு ஒரு புறமிருக்க, அவர்களிடமிருந்து பல அற்புதங்கள் வெளிப்பட்டன. தீர்மான மான கண்ணோட்டமுள்ள யாரும் அவற்றை மறுப்பதற் கில்லை.

அந்த அற்புத நிகழ்ச்சிகளை இந்த அத்தியாயத்தில் தெளி வுபடுத்த விரும்புகிறேன். ஆதாரபூர்வமான நூல்கள் அவற் றைத் தாங்கிக் கொண்டிருக்கின்றன.

இயற்கையின் நடைமுறையைப் பெருமானார் பல தட வைகளில் கிழித்தெறிந்திருக்கிறார்கள்; நடைமுறைக்கு மாற்ற மான நிகழ்ச்சிகளை உருவாக்கி இருக்கிறார்கள். இதுவும் இறைவனின் பேரருள்தான். நற்பண்புகளைக் கொடுத்த இறை வன் அற்புத சக்திகளையும் கொடுத்தான். அவனுடைய அன் பிற்குரிய திருத்தூதரல்லவா?

மக்காவாசிகளின் சந்தேகத்தைத் தீர்ப்பதற்காகப் பெருமா னார் சந்திரனைப் பிளந்தார்கள். பிளவுண்ட அதன் தோற்றத்தை எல்லோரும் கண்டு களித்தார்கள்.

ஜாபீர் என்ற நண்பரின் வீட்டில் உணவுப் பாத்திரத்தில் அவர்கள் அற்புதம் நிகழ்த்தினார்கள். சிறிதளவு உணவை வைத்துக் கொண்டு ஏராளமான விருந்தினர்களுக்கு உணவளித் தார்கள். இது போன்று அபூதல்ஹாவின் வீட்டிலும், அகழி யுத்தத்திலும் அற்புதங்கள் நிகழ்த்தப்பட்டிருக்கின்றன.

ஒரு சமயம் பெருமானாரின் விரல்களிலிருந்து நீர் பொங்கி யது. அதை படை வீரர்கள் எல்லோரும் பருகினார்கள்.

ஆயிரக்கணக்கான வீரர்களுக்கு 'தபூக்' கிணற்றிலிருந்து நீர் கிடைத்தது. வரண்டு கிடந்தக் கிணற்றைப் பொங்கும் நீரூற் றாக்கினார்கள், அண்ணலார்.

ஹுதைபியா என்ற வரண்ட கிணற்றிலிருந்து பெருமா னார் 1500 வீரர்களுக்குத் தண்ணீர் அளித்தார்கள். அது வரண்டு போன கிணறு என்பதை இங்கு நாம் நினைவு கூரவேண்டும்.

பெருமானாருக்கு மேடை ஒன்று எழுப்பும் முயற்சியில் நண்பர்கள் ஈடுபட்டிருந்தார்கள். இந்தக் கட்டத்தில், உயிரற்ற பேரீச்சை மரக்கட்டை அவலக் குரல் எழுப்பி அழுதது. அந்தக் குரலை அங்கு இருந்த எல்லோரும் கேட்டார்கள். ஒட்டகத்தின் குரலைப் போன்று அது இருந்ததாம், அந்தக் கட்டையில் சாய்ந்து கொண்டுதான் பெருமானார் உபதேசம் புரிவார்கள். அந்தக் கட்டை மேடையுடன் இணைத்து வைக்கப்பட்டது; உடனே அதன் குரல் அடங்கி விட்டது.

இவற்றைத் தவிர்த்துப் பெருமானார் எதிர்காலத்தைப் பற்றிய குறிப்புக்களையும் கொடுத்திருந்தார்கள். உஸ்மான் (ரலி) அவர்களுக்குப் பெருமானார் எச்சரிக்கை செய்தார்கள், ''உமக்கு விரைவில் துன்பம் உண்டாகும்...'' என்று. அதன் படியே நடந்தது. ''அம்மார் கொல்லப்படுவார்'' என்று முன்ன றிவிப்புக் கொடுத்தார்கள். அதுவும் நடந்தது. புனிதப் போரில் கலந்து கொண்ட ஒருவனைப் பற்றி, ''அவன் நரக வாதி'' என்றார்கள். பிறகுதான் தெரிந்தது, அந்த மனிதன் தற்கொலை செய்து கொண்டான் என்று.

இவை அனைத்தும் இறைவனின் உதவியால் ஏற்படக்கூ டியவை. வேறு எந்த விதத்திலும் இவற்றை அறிந்து கொள்ள முடியாது. பெருமானார் முன்கூட்டியே அறிந்து கொண்டுவிட் டார்கள்; முன்கூட்டியே அறிவுறுத்தப்பட்டார்கள். வான சாஸ் திரத்தைக் கொண்டோ, மற்ற நூல்களைக் கொண்டோ பெருமா னார் இவற்றை அறியவில்லை. இறைச் செய்தியின் வாயிலா கவே அறிந்தார்கள்.

சுராகா பின் மாலிக்கைப் பூமி விழுங்கிய அற்புதம் எல்லோருக்கும் தெரிந்த விஷயம்.

அஸ்வத் கொல்லப்பட்டது குறித்து அதே இரவில் அவர் கள் அறிவிப்புக் கொடுத்தார்கள். அப்போது அவர் ஸன்ஆவில் இருந்தார். ஸன்ஆ என்ற இடம் யமன் தேசத்தில் இருக்கிறது. அவருக்கும் பெருமானாருக்கும் இடையில் நீண்ட இடை வெளி! அவரைக் கொன்றது யார் என்பதையும் அவர்கள் அறிவித்தார்கள்.

நூறு பேர்கள் வாசலில் காத்து நிற்க, அண்ணலார் ஒரு பிடி மண்ணின் உதவியால் தப்பித்துக் கொண்டு மதீனா புறப்பட்டு விட்டார்கள்.

நண்பர்களின் கூட்டத்தில் பெருமானார் பேசினார்கள்: ''உங்களில் ஒருவன் நரக நெருப்புக்கு இரையாவான்.''

நண்பர்கள் எல்லோரும் ஒருவர்பின் ஒருவராக நல்வழியிலேயே இறந்து விட்டார்கள். பெருமானார் குறிப்பிட்டது போல் ஒருவர் மட்டும் மதம் மாறிவிட்டார்.

உபை பின் கல்ப் பற்றிய மரணச் செய்தியையும் அவர்கள் முன்கூட்டியே தெரிவித்து விட்டார்கள்.

விஷம் கலந்த உணவைப் பெருமானார் உட்கொண்டார்கள். ஆனால் பெருமானார் மரிக்கவில்லை. அவர்களுக்குப் பக்கத்தில் உட்கார்ந்து சாப்பிட்டவர் இறந்துவிட்டார். விஷம் உண்ட அண்ணலார் அதற்குப் பிறகு நான்கு ஆண்டுகள் உயிரோடு இருந்தார்கள், விஷம் அவர்களைப் பாதிக்கவில்லை.

''என் சமூகத்தவரின் சிலர் கடல் கடந்து சென்று வெற்றிப் போர் புரிவார்கள்'' என்று ஒரு சமயம் கூறினார்கள்.

(கைபர் யுத்தத்தின்போது அறிஞர் அலீ அவர்களுக்குக் கண் வலி. பெருமானார், அலீ அவர்களின் கண்களில் தம் உமிழ் நீரைத் தடவினார்கள்.) வலி மறைந்தது.

இப்படி நிகழ்த்தப்பட்ட அற்புதங்கள் ஏராளமாக இருக்கின்றன அவை அனைத்தையும் இங்கு எழுதுவது சாத்தியமில்லை.

சிலர் இந்த உண்மைகளை இப்படிக் கூறி மறுக்கிறார்கள், ''திருமறை ஆதாரபூர்வமானது. அற்புத நிகழ்ச்சிகள் ஆதாரமற்றவை. அப்படி அற்புதங்கள் நிகழ்ந்தன என்பதற்குச் சரியான ஆதாரம் கிடையாது.''

இப்படி வாதிக்கிறார்கள் சிலர். அறியாமை! அறிஞர் அலீயின் வீரத்தையும் ஹாதிம் தாயியின் தர்மசிந்தையையும்

யாரேனும் மறுக்க முடியுமா? யாரேனும் மறுக்கிறார்களா? நூல்களின் மூலமாகத்தானே இவற்றை நாம் அறிகிறோம்? இதேபோன்று பெருமானாரின் அற்புதங்களையும் நூல்களின் வாயிலாகவே அறிகிறோம், முன்னதை அவர்கள் மறுக்க வில்லை. பின்னதை மட்டும் ஏன் மறுக்க வேண்டும்?

திருநபியின் அற்புத ஆற்றல்களில் திருக்குர்ஆனும் ஒன்று. இடம் பார்த்தல்லவா இறைவன் திருமறையைக் கொடுத்திருக் கிறான்! திருமறைதான் அற்புதங்கள் அனைத்தையும்விட மேலானது. அது ஒன்றே பெருமானாரின் நபித்துவத்தை நிரூபிப்பதற்குப் போதுமானது. அந்தத் திருமறையின் உதவி யால் பெருமானார் அரபு நாட்டிலுள்ள இலக்கிய மேதைகளுட னெல்லாம் போட்டியிட்டார்கள்.

அப்போது அரபு நாடு முழுவதும் இலக்கிய மேதைகள் இருந்தார்கள்-ஆயிரக்கணக்கில் இருந்தார்கள். சுத்தமான தவ றில்லாப் பேச்சே அவர்களின் மூச்சு. ஆழமாகப் பேசுவதில் வல்லவர்கள், தவறு கண்டுபிடிப்பதிலும் போட்டியிடுவதிலும் தீரர்கள்.

இத்தகையவர்களைத் தான் பெருமானார் போட்டிக்கு அழைத்தார்கள். ''குர்ஆன் சம்பந்தமாக நீங்கள் சந்தேகப்பட் டால், இதைப்போன்று மற்றொரு குர்ஆனைத் தயார் செய்யுங் கள் பார்க்கலாம்!'' என்று சவால் விட்டார்கள். ''அல்லது பத்து அத்தியாயங்களாவது கொண்டு வாருங்கள்! அதுவும் வேண் டாம், திருமறையில் இருப்பதுபோல் ஒரே ஓர் அத்தியாயம் எழுதுங்கள்!''

எதிரிகளால் எழுத முடியவில்லை.

''திருமறையைப்போல் மற்றொன்று தயாரிப்பதற்காக மானிட வர்க்கமும் 'ஜின்' வர்க்கமும் ஒன்று சேர்ந்தாலும் அவர்களால் அக்காரியத்தைச் சாதிக்க முடியாது!'' என்று இறைவன் கூறுகிறான்.

எனவே அவர்கள் குறுக்கு வழியில் இறங்கினார்கள், பெருமானாரைக் கொன்றுவிட வாளெடுத்தார்கள்; பந்துக்க

ளைச் சிறையிலடைத்தார்கள், என்றாலும் அவர்களால் திருமறையில் குறை காண முடியவில்லை. தம் கண்ணியத்தையும் விட்டுக் கொடுக்க மனமில்லை.

பின்னர் திருமறை மேற்கிலும், கிழக்கிலும் உலகில் எல்லாப் பகுதிகளிலும் பரவி விரிந்தது. காலத்திற்குக் காலம் அதன் சிறப்பு உயர்ந்தது. ஏறத்தாழ *500** ஆண்டுகள் மறைந்து போய்விட்டன. இன்னும் எந்த மனிதனும் அதில் குறைகாண வில்லை. நடு நிலையில் நின்று ஆராய்பவர்களால் நிச்சயம் உண்மையை அறிய முடியும். பெருமானாரின் வாழ்க்கை, பேச்சு, சிரிப்பு, சிந்தனை, பண்பு, அன்பு, தயாளம் - இவற்றைப் பார்ப்பவர்கள் ஆச்சரியப்படாமலிருக்க முடியாது. நேர்மையோடு எண்ணிப் பார்ப்பவர்கள் பெருமானாரை அவசியம் நம்புவார்கள், பின்பற்றுவார்கள்.



* பெருமானாரின் காலம் இற்றைக்கு 1400 ஆண்டுகளுக்கு முந்தியது. பெருமானாரின் காலத்திலிருந்து 500 ஆண்டுகளுக்குப் பிறகு இமாம் கஸ்ஸாலி தோன்றினார்கள்.